# இளைஞர்களே! நீங்கள் வழுக்கை ஆகத்தான் வேண்டுமா?

வேண்டாம் வந்துவிட்டது அன்மோல் H.H. கிரீம். கொத்து கொத்தாக முடி கொட்டும் பெண்களுக்கு அன்மோல் H.H. டாநிக் எதற்காக? பொடுகு, ஓயாத அரிப்பு, புழுவெட்டு செதில் உதிரல், படை, பிசுபிசுப்பு, நாட்பட்ட சோரியாசிஸ், ஓயாத தும்பல், டஸ்ட் அலர்ஜி என்னும் சைனஸ் விரைவில் குணமாகும். இன்றைய உலகில் 17 வயது முதல் 25 வயது வரை உள்ள இளைஞர்களுக்கு வழுக்கை ஆவதற்கான அறிகுறி நெற்றியின் இருபக்கமும் முடி கொட்டி, சொட்டை ஏறி கொண்டே போகும். 26 வயது முதல் உச்சியில் முடி கொட்டும். சிலருக்கு கீழ்கண்ட படத்தின் போல் பரவலாக முடி கொட்டும். எந்த எண்ணை எந்த திரவத்தை தடவினாலும் முடி கொட்டுவது நிற்காமல் வழுக்கையானவர்கள் பல கோடி பேர். 'ஹேர் திரான்ஸ்பேஷன்' செய்தவர்களுக்கு உங்கள் பின்புறமாக முடியகை எடுத்து நட்டு இருந்தாலும் சரி, நட்ட முடி கொட்டாது மற்ற முடிகள் கொட்டினாலும் சொட்டையாக இருந்தாலும் எங்களிடம் வாருங்கள் கடல் நீரை நண்ணீராக ஆக்கி குளிப்பவர்களுக்கும் முடி கொட்டும். நீங்கள் வழுக்கை பரம்பரையில் பிறந்திருந்தாலும் சரி கவலை வேண்டாம். மற்ற எந்த காரணத்தினால் முடி கொட்டிக் கொண்டிருந்தாலும் சரி தற்போது உங்களின் நிலை என்ன? கீழ் கண்ட புகைப்படங்களில் நான்கை நன்றாக உற்றுப் பாருங்கள். அதில் எப்படியிருந்தாலும் கவலை வேண்டாம். வைத்தியர் DHATA மற்றும் இந்திய யூனானி, ஆயுர்வேதா, சித்தா மருத்துவ குழுவிடம் வந்து உங்கள் தலையை பரிசோதித்து உங்களுக்கு முடி முளைக்குமா? முளைக்காதா? என்று சொல்லிவிடுவோம். 17 முதல் 24 வரை இளைஞர்களுக்கு நெற்றியின் இருபக்கமும் சொட்டையில் அன்மோல் ஹேர்பல் ஹேர் க்ரீம் தடவினால் கொட்டுவது நாலே நாளில் நின்று பத்தே நாட்களில் நைசான முடி முளைக்கும். இது ஒரு மருத்துவ உலகத்திற்கு சவாலானது. உலகில் இதற்கு இணை வேறு எதுவும் இல்லை. எங்கள் முறைபடி சிகிச்சைப் பெற்றும் உங்களுக்கு வழுக்கையானால் நீங்கள் சிகிச்சை செய்த பணத்தில் அரசாங்கத்தின் TAX பிடித்துக் கொண்டு மீதி பணத்தை உங்களிடம் தந்து விடுவோம்*. வயது வரம்பு கிடையாது. பக்க விளைவுகள் கிடையாது. காலத்தை வீணாக்காதீர்கள். உடனே நேரில்.





வெளிநாட்டில், வெளிமாவட்டத்தில் உள்ளவர்கள் சிகிச்சை பெற வேண்டுமென்றால் இங்கே இருப்பதை போல் உங்கள் புகைப்படங்களை மூன்று கோணத்தில் Maxi Size-ல் எங்களுக்கு அனுப்பவும்.










## வைத்தியர் தஹட்டா

நெ. 11/5, சவுந்திர ராஜன் தெரு, திநகர், சென்னை–17. (திநகர் திருப்பதி தேவஸ்தான கோவில் அருகில்)
போன்: 55394127, 32550555, Web: www.tooba-herbal.com, Mail: mail@tooba-herbal.com

நேரம்: காலை 9.00 முதல் மாலை 8.00 வரை

* Condition apply

# சென்னையில் சச்சின் மேளா!



சென்ற வாரம் முழுக்க சென்னை 'புஸ்... புஸ்' என்று மூச்சுவிடவில்லை. 'சச்சின்... சச்சின்' என்றுதான் மூச்சுவிட்டது. பத்திரிகை, டீ.வி. என்று எங்கு பார்த்தாலும் சச்சின் புராணம்தான். பொதுவாகவே சச்சினுக்கு தமிழ்நாட்டுக்கு வருவதென்றால் ஏககுஷி. இதில் சென்னையிலேயே ஒருவாரம் தங்க வேண்டும் என்றால், கேட்க வேண்டுமா என்ன? மூட்டை முடிச்சுகளோடு கிளம்பி, சிட்டாய்ப் பறந்து வந்துவிட்டார்.

டீ-ஷர்ட், ஜீன்ஸ் சகிதம் படு கலக்கலாக வந்தவருக்கு சென்னை விமான நிலையத்தில் அசத்தல் வரவேற்பு கொடுக்கப்பட்டது. வாசலில் காத்திருந்த பத்திரிகையாளர்களுக்கு முகம் சுளிக்காமல் பேட்டி கொடுத்துவிட்டு ஹோட்டலுக்குக் கிளம்பினார் சச்சின்.

"எனக்கு சென்னையை ரொம்பப் பிடிக்கும். ஏன்னா இங்க தர்ற வரவேற்பு, விருந்தோம்பல் எல்லாமே ரொம்ப வித்தியாசமானது. ரொம்ப ஸ்பெஷலும் கூட. இன்னொரு முக்கியமான விஷயம் என்ன தெரியுமா? வேகப்பந்து வீச்சாளர் ஆகணும்ங்கற ஆசையில வந்த என்னை பேட்ஸ்மேனாக்கி திருப்பி அனுப்பினது சென்னைதான்" என்று கன்னத்தில் குழி விழச் சிரித்தார் சச்சின். அந்தச் சிரிப்பை சிந்தாமல் சிதறாமல் அள்ளிக் கொண்டன கேமராக்கள்.

சென்றமுறை வந்தபோது ஏதோ ஒரு ஹோட்டலில் நம்மூர் இடியாப்பம் சாப்பிட்டிருக்கிறார் சச்சின். தற்போது அதை ஞாபகம் வைத்துக்கொண்டு கேட்க, கொஞ்சம் சிரமப்பட்டுத்தான் கொண்டு வந்து கொடுத்தார்களாம். இந்த முறை தேங்காய்ப்பால் ஆப்பம் அவரை அடிமையாக்கிவிட்டது. (அடுத்த முறை ரெடியா வச்சுக்கோங்கப்பா. நம்ம வீட்டில் மாஸ்டர் கோவிச்சுக்கப் போறாரு).

அண்மையில்தான் அறுவை சிகிச்சை முடிந்துள்ள சச்சினுக்கு அடுத்து அணியில் இடம்பெற போதிய பயிற்சி தேவைப்படுகிறது. அதற்குத் தோதான இடம் நம்மூர் எம்.ஆர்.எஃப். பேஸ் ஃபவுண்டேஷன் தான். அதனால்தான் இங்கே வந்து ஒரு வாரம் பயிற்சி எடுத்துவிட்டுச் சென்றிருக்கிறார்.

அவர் போன இடங்களில் எல்லாம் எப்படித்தான் மீடியாவும், பள்ளிக் குழந்தைகளும் கரெக்டாக ஆஜரானார்களோ தெரியவில்லை. 'ஆட்டோகிராஃப் போட்டே இன்னொரு தடவை லண்டன் அனுப்பிடாதீங்க' என்று ஒருவர் ஆங்கிலத்தில் சொல்ல, "இட்ஸ் மை ப்ளஷர்" என்று சிரித்தாராம் சச்சின்.

- முராரி

படம் : ஸ்ரீஹரி

# சாமான்ய வெற்றி!

தோழர் வி.எஸ். என்று கேரள மக்களால் அழைக்கப்படும் வெளிக்கா காத்து சங்கரன் அச்சுதானந்தன் கேரளாவின் புதிய முதலமைச்சராகப் பதவி ஏற்றிருக்கிறார். ஆனால், அவருக்கு இந்தத் தேர்தலில் போட்டியிடுவதற்கு சீட்டு தரவே கட்சி தயங்கியது. கட்சிக் காரர்கள் கேரளா முழுவதும் ஊர்வலம் நடத்தி வலியுறுத்தியதின்பேரில், சீட்டு கொடுக்கப்பட்டது. காரணம் உட்கட்சி பாலிடிக்ஸ்.

அச்சுதானந்தன் ஒரு பழைமைவாதி. தாராளமயமாக்கல், பள்ளிகளில் கம்ப்யூட்டர் கல்வி, அந்நிய முதலீடு, இன்னபிற விஷயங்களெல்லாம் அவர் எதிர்க்கும் அம்சங்கள். இதுவரை ஒரு முறைகூட இடதுசாரி அமைச்சரவைகளில் இடம் பெறாதவரான அச்சுதானந்தன், இப்போது ஒரே தாவலில் முதல்வர் நாற்காலியில் அமர்ந்து விட்டார். "இந்திய ஜனநாயகத்தில் ஒரு சாதாரண மனிதன் கூட முதலமைச்சராக முடியும் என்பதற்கு அச்சுதானந்தன் ஒரு எளிய உதாரணம். இது சாமான்ய இந்தியனுக்குக் கிடைத்த வெற்றி" என்கிறார் முன்னாள் உச்சநீதி மன்ற நீதிபதி வீ.ஆர்.கிருஷ்ணய்யர்.

அச்சுதானந்தன் ஆலப்புழா அருகில் புன்னாபுராவில் பிறந்தவர். பள்ளிக்கூடத்தில் ஏழாம் வகுப்புப் படிக்கிறபோது பாதியில் படிப்பை விட்டுவிட்டு அரசியலுக்கு வந்தவர். முதலில் காங்கிரஸ் கட்சியில்தான் இருந்தார். ஆனால் சீக்கிரமே அதன் நடவடிக்கைகளில் வெறுப்புற்று கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். ஆரம்ப காலத்தில் தொழிற்சங்க நடவடிக்கைகளில் ஈடுபட்டவர். பல்வேறு போராட்டங்களில் ஈடுபட்டு ஐந்தரை ஆண்டுகள் சிறையிலும், நாலரை ஆண்டுகள் தலைமறைவாகவும் கழித்தவர். 65-ல் முதல் முறையாக கேரள சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன்பின் கேரள அரசியலில் முக்கியமான தலைவராக விளங்கி வருகிறார்.

* அச்சுதானந்தன்

அச்சுதானந்தனுக்கு வயது 83. இந்த வயதிலும் சுறுசுறுப்புக்குப் பஞ்சமில்லை. தினமும் காலையில் வாங்கிங் போவதைக் காணலாம். 'உங்கள் சுறுசுறுப்பின் ரகசியம் என்ன?' என்று கேட்டால், "கொஞ்சமாகச் சாப்பிடுகிறேன்; நிறைய உழைக்கிறேன்" என்று சொல்கிறார்.

"அச்சுதானந்தன் முதலமைச்சரானால் கேரளாவில் வளர்ச்சி இருக்காது"

என்று காங்கிரஸ்காரர்கள் விமர்சித்தபோது, அவர் கொடுத்த பதிலடி என்ன தெரியுமா?

"காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் காங்கிரஸ் காரர்கள் பாக்கெட் தவிர, கேரளாவில் வேறு என்ன வளர்ச்சி இருந்தது?"

- எஸ். சந்திரமௌலி

படம் : ஸ்ரீஹரி

## எல்லாம் பாலிடிக்ஸ்!

சுதந்திரப் பொன்விழா சிறப்பு மலருக்காக ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாடைப் பேட்டி காண 97ஆம் வருடம் திருவனந்தபுரம் சென்றபோது, மறுநாள் மார்க்ஸிய கம்யூனிஸ்ட் தலைவர் வி.எஸ்.அச்சுதானந்தனையும் பேட்டி கண்டோம்.

'கல்கி'யிலிருந்து வந்திருக்கிறோம் என்றதும் வி.எஸ்.ஸுக்குச் சற்று வியப்பு.

"பத்தே நிமிடம் கொடுங்கள். குளித்து விட்டு வந்துவிடுகிறேன்!" என்றார்.

வந்து நாற்காலியில் அமர்ந்தவர், "ஈ.எம். எஸ்ஸைப் பார்த்தீர்களா? என்ன சொன்னார்?" என்று முதலில் விசாரித்தார். சொன்னோம். பிறகு, "நாயனாரைப் பார்த்தீர்களா?" என்று கேட்டார் (நாயனார் அப்போது முதலமைச்சர்). "பார்த்தோம். சில புகைப்படங்கள் மட்டும் எடுத்துக் கொண்டோம்!" என்றோம்.

"ஏன், பேட்டி தரவில்லையா?"

"பேட்டிக்கு நேரம் குறிக்கவில்லை. 'ஈ.எம்.எஸ் அவர்களைப் பேட்டி காணத்தான் வந்தோம். அப்படியே உங்களையும் மரியாதை நிமித்தம் சந்தித்துப் போக விரும்பினோம். பேட்டி கிடைத்தால் மகிழ்ச்சிதான்' என்று நாயனாரிடம் சொன்னோம். 'அதுதான் ஈ.எம். எஸ்ஸைப் பேட்டி காணப் போகிறீர்களே...? அவரிடமே எல்லாவற்றையும் கேட்டுக் கொள்ளுங்கள்!' என்று சொல்லிவிட்டார்" என்றோம்.

'கொல்'லென்று சிரித்துவிட்டார் வி.எஸ். எல்லாம் உள்ளூர் பாலிடிக்ஸ்!

- சாருகேசி



**கல்கி**

ஒவ்வொரு இதழும் உங்கள் பேழைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி

ஆசிரியர் குழு : ஆர்.சி. ஜெயந்தன், மு.மாறன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன், ச. கார்த்திகேயன்

தொலைபேசி : 2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் : 044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# “ஜெ. சபைக்கு வராதது

## – விஜயகாந்த் விளாசல்

**பா.ம.கவை அதன் குகையிலேயே சந்தித்து வெற்றி பெற்று, தம் மீது நிலவிய கேள்விக் குறிகளை ஆச்சர்யகுறிகளாக்கி இருக்கிறார் விஜயகாந்த். நாம் கேட்கும் கேள்விகளை உன்னிப்பாகக் கவனித்து மிகவும் நிதானமாக பதில்களை அளிக்கிறார். அவர் வெளிப்படுத்தும் வார்த்தைகளில் ஒருவித முதிர்ச்சி தெரிகிறது. அவருடனான சந்திப்பிலிருந்து...**

**காங்கிரஸுக்குச் சமமாக 8.38 சதவிகித வாக்குகளை வாங்கியிருக்கிறீர்கள். ஆனாலும் ஒரேயொரு இடம் மட்டுமே ஜெயித்துள்ளீர்கள். இது வெற்றியா அல்லது தோல்வியா?**

“கண்டிப்பாக வெற்றிதான். ஏன்னா நான் இந்த சதவிகிதத்தை தனிச்சு நின்னு வாங்கியிருக்கேன். உண்மையா என் மனசுக்குள்ள இருபதுல இருந்து முப்பது சீட்டு வாங்கிடுவேன்னு கணக்குப் போட்டிருந்தேன். இந்த வோட்டு சதவிகிதத்துக்கு நான் எதிர்பார்த்த சீட் வந்திருக்கணும். ஆனா வராததுக்குக் காரணம் எல்லோரும் கூட்டணியா நின்னதுனால இருக்கலாம். இருந்தாலும் ஒரு எட்டு மாசக் குழந்தையான எங்க கட்சி, இந்த அளவுக்கு வோட்டு வாங்கியிருக்கறது பெரிய விஷயம்.”



**விருத்தாசலத்தைத் தேர்ந்தெடுத்ததற்கு என்ன காரணம்?**

“எல்லோருமே ஏன் இதையே கேட்கறீங்கன்னு தெரியலை. கடலூர் மாவட்டத்துக்கு நான் போறப்போ பலமுறை விருத்தாசலத்துக்கும் போயிருக்கேன். அது ஒரு ரிமோட்டான கிராமம். அதை ஒரு மாதிரி கிராமமா மாத்தணும்னு எனக்கு ஒரு ஆசை உண்டு. அதனாலதான் நின்னேன். ஆனா அதுக்குப் பத்திரிகைகள்ல சொல்ற மாதிரி எந்தக் காரணமும் இல்ல.”

**எல்லாத் தொகுதியிலும் நின்று, நீங்கள் மட்டும் ஜெயித்திருப்பது தொண்டர்களிடம் சோர்வை ஏற்படுத்தியுள்ளதா?**

“எந்த வருத்தமும் இல்லை. எல்லாக் கட்சிகளுக்கும் சமமா நாமும் வோட்டு வாங்கியிருக்கோம்; மக்கள்கிட்ட அங்கீகாரம் கிடைச்சிருக்குங்கறதுல தொண்டர்களுக்கு ரொம்ப சந்தோஷம். அதை நேரடியாவே என்கிட்ட பகிர்ந்துக்கிட்டாங்க. அடுத்தடுத்து வரப்போற தேர்தல்கள்ல பொறுப்புகள் கிடைக்கறப்போ அவங்க முழுமையா சந்தோஷப்படுவாங்க.”

**தி.மு.கவை விமர்சித்த அளவுக்கு அ.தி.மு.கவையும் விமர்சித்திருந்தால் உங்கள்**

**வாக்கு சதவிகிதம் உயர்ந்திருக்கும் என்று நினைக்கிறீர்களா?**

''நான் ரெண்டு பேரையுமே சமமாத்தான் விமர்சித்தேன். ரெண்டு பேர் குறைகளையும்தான் பட்டியல் போட்டேன். ஆனா அது மீடியாவுல சரியா பதிவாகலை. யாருக்கு எந்த நியூஸ் வேணுமோ அதைப் போட்டுக்கிட்டாங்க. அவங்க ரெண்டு பேர் செய்த தப்பையும் சொல்லித்தான் நான் எனக்கு வோட்டுக் கேட்டேன்.''

**சட்டமன்றத்தில் தனி ஆளாக உள்ளே போய்ப் பார்த்த பிறகு தான் தெரிய வரும்.''**

**சட்டமன்றத்துக்குள் வெட்டுத் தீர்மானம், கவனஈர்ப்புத் தீர்மானம், ஒத்திவைப்புத் தீர்மானம் என்று பல விஷயங்கள் இருக்கின்றன. அது பற்றி ஏதும் தெரிந்து கொண்டீர்களா?**

''இதுவரைக்கும் தெரியாது. எல்லாத்தையும் வேகமாகத் தெரிஞ்சுக்குவேன். அதன்பிறகு எப்படிச் செயல்படப் போறேன்னு

# தவறே இல்லை!''

**என்ன செய்ய முடியும் என்று நினைக்கிறீர்கள்?**

''ஒரு கையைத் தட்டினா ஓசை வராதுதான். ஆனா, தனி ஆளா இருக்கேங்கறதுக்காக எதுவுமே கேட்காம இருக்க முடியாது. மக்களுக்கு என்ன தேவையோ அதுக்காக நிச்சயமா சட்டமன்றத்துல குரல் கொடுப்பேன். தொட்டதுக்கெல்லாம் வெளிநடப்பு பண்ண மாட்டேன். இன்னிக்கு வெளிநடப்பு பண்ணிட்டா மறுநாள் அந்த சபைக்குத்தானே வரணும். மக்களுக்காகக் குரல் கொடுக்க வந்துட்டு, வெளிநடப்பு பண்றதில் எனக்கு உடன்பாடே இல்ல. இந்த விஷயத்துல என்னோட நடவடிக்கை நிச்சயமா வித்தியாசமானதா இருக்கும். ஆனா இவ்ளோ பெரிய கூட்டத்துல என்னைக் கவனிப்பாங்களான்னு தெரியலை.



நீங்க பார்க்கத்தானே போறீங்க.''

**விருத்தாசலத்துக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?**

''அடிப்படை வசதிகள் உள்ளிட்ட நிறைய விஷயங்கள் செய்ய வேண்டியிருக்கு. எல்லாத்தையுமே உடனடியா செய்ய முடியாது. குறைந்தது ஒரு வருஷத்துக்குப் பிறகுதான் ஒவ்வொண்ணா செய்துதர முடியும்.''

**ஜெயலலிதா சட்டமன்றத்துக்கு வரமாட்டேன் என்று சொல்லிவிட்டாரே...**

''அது அவங்களோட சொந்த விஷயம். பத்துப் பேர் இருக்கற இடத்துல யாராவது ஒருத்தர் அவங்களைத் தப்பா பேசப்போக, அதன் காரணமா வரப்போற பிரச்னைய தடுக்கறதுக்காக, அவங்க வரவேண்டாம்னு முடிவெடுத்திருக்கலாம். எனக்குத் தெரிஞ்சு அவங்க செய்றது தப்பே இல்ல. அதனால தான் கலைஞர் சபைக்கு வராம இருந்ததை நான் பெருசா விமர்சிக்கலை.''

**உங்களுக்குக் கிடைத்த வாக்குகளை கறுப்பு எம்.ஜி.ஆர். என்று சொன்னதால் விழுந்தவை என்கிறார்கள் சிலர். வேறு சிலர் தி.மு.க. வாக்குகளைப் பிரித்து விட்டார் என்கிறார்கள். இன்னும் சிலர் வைகோவுக்கு ஆதரவான சமுதாய வாக்குகளை வாங்கி விட்டார் என்கிறார்கள். எதுதான் உண்மை?**

''நான் யாரோட வாக்குகளையும் பிரிக்கல. எல்லாமே எனக்காக விழுந்த வாக்குகள். என்னோட முகத்துக்காக, எங்க கட்சியோட தேர்தல் அறிக்கைக்காக விழுந்த வாக்குகள்தான். விஜயகாந்த் சொன்னா செய்வார்ங்கற நம்பிக்கைக்கு விழுந்த வோட்டு. ஆனா பத்திரிகைங்கதான் இப்படியெல்லாம் அவங்க இஷ்டத்துக்கு எழுதிக்கறாங்க.''

**மற்ற கட்சிகளுக்கு ஆதரவாகப் பல நடிகர்கள் பிரசாரம் செய்யும் போது, நடிகரான நீங்கள் ஆரம்பித்த கட்சிக்கு எந்த நடிகரும் வரவில்லை என்ற வருத்தம் இருக்கிறதா?**

''நிச்சயமா இந்த விஷயத்துல எனக்கு வருத்தமே கிடையாது. ஏன்னா எனக்கு சினிமாவைப் பத்தி நல்லாவே தெரியும். என் கட்சிக்கு யாரும் விரும்பி வந்தா வரவேற்பேன். யாரையும் வற்புறுத்த விரும்பல.''

**மக்கள் மாற்றத்தை விரும்புகிறார்கள். அதனால் உங்களுக்கு வாக்களித்தார்கள் என்கிறீர்கள். உங்கள் மீதான மக்களின் இந்த எதிர்பார்ப்பு அடுத்த தேர்தலின் போதும் இருக்குமா?**

# ''எதுவும் செய்யாதவருக்கு மந்திரி பதவி தர்றது தவறானது!''

"ஏன் இருக்காதுன்னு கேட்கறேன். அந்த நம்பிக்கையை மக்கள்கிட்ட உருவாக்கறதுக்குத்தானே கட்சி நடத்தறோம். அதுக்குத் தலைவர்னு நான் இருக்கேன். அந்த எதிர்பார்ப்பு, நம்பிக்கை நீடிக்கணும்னா நிச்சயமா கடுமையா உழைக்கணும். எங்க கட்சிக்கு இனிமேதான் எல்லாமே இருக்கு."

**தமிழக அமைச்சரவையில் ஸ்டாலின் உள்ளிட்ட ஐந்து வாரிசுகளுக்கு அமைச்சர் பதவி தந்துள்ளது பற்றி?**

"ஸ்டாலினுக்கு அமைச்சர் பதவி தந்ததை நான் தப்புன்னு சொல்ல மாட்டேன். மத்தவங்கள்லாம் எந்த அளவுக்கு கட்சிக்குச் சேவை செய்திருக்காங்க, கட்சிக்காக எப்படி உழைச்சிருக்காங்கன்னு பார்க்கணும். ஆனா கட்சிக்காக எதுவும் செய்யாத ஒருத்தருக்கு திடீர்னு மந்திரி பதவி கொடுக்கறது தப்புதான்."

**நடிகர் சங்கத் தலைவர் பதவியை ராஜினாமா செய்யப்போவதாகத் தகவல்கள் வருகின்றனவே?**

"அதைப் பத்தி இன்னும் எந்த முடிவும் எடுக்கல. இப்போதான் தேர்தல் முடிஞ்சிருக்கு. இனிமேதான் சங்கத்துக்குள்ளே போகணும். என்ன ஏதுன்னு பார்க்கணும். இப்போ எலெக்ஷன் வரப்போகுது. அது ஜூன்லயா இல்ல டிசம்பர்லயான்னு தெரியல."

**தமிழக அரசு தொடர்ந்து நீடிக்கும் என்று நினைக்கிறீர்களா?**

"இப்படி தொங்கு சட்டமன்றம் அமையும்னு நான் எதிர்பார்த்தேன். இந்த அரசு நீடிக்கலாம். நீடிக்காமலும் போகலாம். இரண்டுக்கும் வாய்ப்பு இருக்கிறது."

**- ஆர். முத்துக்குமார்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# தகர்ந்த கோட்டை...

தேர்தலில் வென்று ஆட்சியமைத்தாலும் சென்னையில் பல இடங்களை அ.தி.மு.கவிடம் கோட்டைவிட்டுள்ளது தி.மு.க. 'சென்னை தி.மு.க. கோட்டை' என்று கூறப்பட்டு வந்தது இந்தத் தேர்தலில் தகர்ந்து போயுள்ளது.



• பாலகங்கா



• சேகர் பாபு

அ.தி.மு.க. தோன்றி முதன் முதலாகப் போட்டியிட்ட 1977 தேர்தல் முதல், இன்றுவரை பார்த்தால் கடந்த எட்டு தேர்தல்களில் இத்தனை தொகுதிகளில் சென்னையில் அது வெற்றி பெற்றதில்லை. மேலும் சென்னையில் அ.தி.மு.க., தி.மு.கவை விட இருபதாயிரம் கூடுதல் வாக்குகளும் பெற்றுள்ளது. அடுத்த நான்கு மாதங்களில் சென்னை மாநகராட்சி கவுன்சிலர் மற்றும் மேயருக்கான நேரடித் தேர்தல் நடக்க இருப்பதால் சட்டமன்ற தேர்தல் முடிவுகளின் தாக்கம் அதிலும் தெரியுமோ என்று தி.மு.க. தலைமை கவலைப்படத் துவங்கியுள்ளது.



அதைச் சமாளிக்கும் விதமாக உள்ளாட்சித்துறை அமைச்சர் மு.க.ஸ்டாலின் பல யுக்திகளை வகுத்து வருகிறார்.

"அ.தி.மு.க இந்த அளவு வென்றதற்குக் காரணம், வெள்ள நிவாரணமாக சகட்டு மேனிக்குக் கொடுக்கப்பட்ட இரண்டாயிரம் ரூபாயும், மகளிர் சுய உதவிக் குழுக்களுக்குப் பணம் கொடுத்து வோட்டு வாங்கியதும்தான்'' என்று அடித்துச் சொல்கிறார் இரண்டு முறை தி.மு.க. எம்.எல். ஏவாக இருந்தவரும், மூத்த உடன் பிறப்புமான அண்ணாநகர் சோ.மா. ராமச்சந்திரன். இவர் இப்படிச் சொன்னாலும் ஒவ்வொரு தொகுதியிலும் தோற்றதற்கும் ஒவ்வொரு காரணங்களைச் சொல்கின்றனர் உடன் பிறப்புகள். சைதையில், தி.மு.கவினர் ஒத்துழைப்பு இல்லாததால் பா.ம.க தோற்றது. திருவல்லிக்கேணியில் உசேன் மீண்டும் நின்றிருந்தால் இஸ்லாமியர், பிராமணர் ஆகிய இரு பிரிவினரின் வாக்குகளையும் அள்ளி வெற்றி பெற்றிருப்பார். மைலாப்பூர் மீனவக் குப்பங்கள் இரண்டாயிரம் ரூபாய் மற்றும் சுனாமி நிவாரணம் காரணமாக அ.தி.மு.க. பக்கம் சாய்ந்து விட்டன. பார்க் டவுனைப் பொறுத்தமட்டில் அ.தி.மு.க. வேட்பாளர் உள்ளூர்க்காரர், எளிதாக அணுக முடியும்.

வடசென்னையில் ஆர்.கே.நகரும், ராயபுரமும் அ.தி.மு.க. கோட்டைகளாகி வருகின்றன. இதற்குக் காரணம் சேகர் பாபுவும், ஜெயக்குமாரும்தான். இவர்கள் தொகுதியைத் தங்கள் கைப்பிடிக்குள் வைத்திருக்கிறார்கள்.

அதே நேரம் பேராசிரியர் அன்பழகன் அடித்துப் பிடித்து வெற்றியைத் தொட்டிருக்கிறார் துறைமுகம் தொகுதியில். தி.நகரில், தென் சென்னை தி.மு.க. செயலாளர் அன்பழகன் தோற்றது மிகப் பெரிய அதிர்ச்சி. ''எம்.எல்.ஏவாகவும், மாவட்டச் செயலாளராகவும் இரு பொறுப்புகளில் செயல்பட்டால் எந்த ஒரு

# தளர்ந்த தி.மு.க?



பொறுப்பையும் முழுமையாக நிறைவேற்ற முடியாது" என்கிறார் சோ.மா. ராமச்சந்திரன்.

"இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தது போன்ற காரணங்களைச் சொல்லி நாங்கள் தப்பித்துக் கொள்ளலாம். ஆனால் உண்மையான காரணம் என்ன என்பதை மனச்சாட்சியின்படி பார்த்துக் கொள்வது கட்சியின் எதிர்காலத்துக்கு நல்லது" என்கிறார் வடசென்னை முக்கிய தி.மு.க. பிரமுகர்.

"எங்கள் மாவட்டச் செயலாளர் கடந்த இரண்டு ஆண்டுகளில் எத்தனை பொதுக் கூட்டங்கள் போட்டிருக்கிறார், எத்தனை செயல்வீரர்கள் கூட்டம் போட்டிருக்கிறார், எத்தனை வட்டங்களுக்கு விசிட் செய்திருக்கிறார், என்று கணக்குப் பார்த்தால் செயலாளரின் செயல்பாடு 'பளிச்'சென தெரியும். தளபதியின் நம்பிக்கையைப் பெற்றால் மட்டும் போதுமா? அதைக் காப்பாற்ற உழைக்க வேண்டாமா! இதே நிலை தொடர்ந்தால் வடசென்னையில் தோன்றிய கழகம் காலப்போக்கில் அந்தப் பகுதியில் காணாமல் போய்விடும் வாய்ப்பு இருக்கிறது" என்று வேதனையுடன் சொல்கிறார் அந்தப் பிரமுகர்.

எல்லா மட்டங்களிலும் இளரத்தம் பாய்ச்சப்பட வேண்டும் என்று சொல்கிறார்கள் உடன்பிறப்புகள்.

"கடந்த ஐந்து ஆண்டுகளில் அம்மா ஆட்சியில் அடிப்படை பிரச்னைகள் சென்னை மாநகராட்சி பகுதிகளில் தீர்க்கப்பட்டிருக்கின்றன. சாலை வசதி மேம்பாடு அடைந்திருக்கிறது. குடிநீர்ப் பிரச்னை தீர்க்கப்பட்டிருக்கிறது. கழிவு நீர் இணைப்பு நடைமுறை மிகவும் சுலபமாக்கப்பட்டு, ஏழை மக்களுக்கு 100 ரூபாய் மட்டுமே கட்டணமாக வசூலிக்கப்பட்டது. பூங்காக்கள் புதுப்பிக்கப்பட்டு நடுத்தர மக்களை குஷிப்படுத்தியிருக்கிறோம். சென்னையில் ரவுடி ராஜ்ஜியம் அடியோடு ஒழிக்கப்பட்டது. இந்த சாதனைகளுக்காகத்தான் அம்மாவுக்கு மக்கள் வோட்டளித்தார்கள். சென்னை தி.மு.க. கோட்டை என்பது ஒரு மாயை. வரும் மாநகராட்சி தேர்தலில் தி.மு.க. சென்னையில் அடியோடு காணாமல் போகும்" என்கிறார்கள் வடசென்னை மற்றும் மத்திய சென்னை அ.தி.மு.க. மாவட்டச் செயலாளர்களான சேகர்பாபுவும், பாலகங்காவும்.

"மாநகராட்சி தேர்தல் என்பது சட்டமன்ற தேர்தலைவிட வித்தியாசமானது. அதில் கட்சி அபிமானத்தைவிட வார்டு கவுன்சிலராகப் போட்டியிடும் தனிநபரின் செயல்பாடு, அணுகுமுறை எடை போடப்படும். மேயருக்கான நேரடித் தேர்தலில் தி.மு.க.வெற்றி பெறும்" என்கிறார் சோ.மா.ராமச்சந்திரன்.

கூட்டிக் கழித்துப் பார்க்கும்போது வரும் மாநகராட்சி தேர்தல் முடிவுகள் சென்னை தி.மு.க. கோட்டையா, இல்லையா என்பதைத் தெரிவித்துவிடும்.

- ப்ரியன்

# மூளைக்கு வேலை


• டாக்டர் ஜான்

**டாக்டர் ஜான் ஹாட்ஜெஸ், பிரிட்டன் கேம்ப்ரிட்ஜில் உள்ள மூளை ஆராய்ச்சி அமைப்பில் பணியாற்றும் பேராசிரியர். கேம்ப்ரிட்ஜ் அல்ஸைமர் நோய் ஆராய்ச்சி நெட்வொர்க் அமைப்பின் இயக்குநரும்கூட. அண்மையில் சென்னைக்கு வந்திருந்தவரைச் சந்தித்து மூளையின் நினைவாற்றல் தொடர்பான சில விளக்கங்களைப் பெற்றோம்.**

***மறதி, அல்ஸைமர் நோய் போன்ற பல மூளைச் சிக்கல்களும் சுமார் அறுபது வயதுக்கு மேல்தான் ஏற்படுகிறது என்கிறார்கள். இந்தக் காலகட்டத்தில் மூளைக்கு அதிக வேலை கொடுக்கும் விதத்தில் நிறைய படிப்பது, குறுக்கெழுத்து, எண் கணிதம் போன்ற புதிர்களில் ஈடுபடுவது நல்லதா? அல்லது அதிக வேலைப் பளுவினால் மூளையில் உள்ள செல்கள் சீக்கிரமே அழிந்துவிடும் அபாயம் உண்டா?***

"சந்தேகம் வேண்டாம். இதுபோன்ற செயல்களில் ஈடுபட்டு மூளையைச் சுறுசுறுப்பாக வைத்துக்கொள்வது மிகவும் நல்லது. சொல்லப்போனால் மூளையைப் புத்துணர்வுடன் வைத்துக்கொள்ள இந்தச் செயல்கள் உதவுவதால் மூளை பாதுகாக்கப்படுகிறது என்றுகூடச் சொல்லலாம்."

***சிலருக்கு பழைய சம்பவங்கள் தெளிவாக நினைவில் இருக்கும். ஆனால் சமீபத்தில் நடந்தது மறந்துவிடும். இதற்குக் காரணம் என்ன?***

"'நினைவாற்றல்' என்று பொதுவாக ஒரே வார்த்தையில் நாம் குறிப்பிட்டாலும், இதில் பல வகைகள் உண்டு. இவற்றில் சில நினைவாற்றல்கள் சிறப்பாகச் செயல்படலாம். வேறுசில அப்படி இல்லாமல் போகலாம். இதற்குக் காரணம் ஒவ்வொரு வகை நினைவாற்றலும் மூளையின் ஒவ்வொரு பகுதியில் சேமித்து வைத்துக் கொள்ளப்படுவதுதான். மூளையின் எந்தப் பகுதிக்கு பாதிப்பு நேருகிறதோ, அந்த நினைவாற்றல் பாதிக்கப்படுகிறது.

உதாரணமாக இப்போது தான் வந்து சேர்ந்த தகவலை மறந்துவிடுவது, ஒருவருடன் பேசிக் கொண்டிருக்கும்போதே நடுநடுவே என்ன பேசிக்கொண்டிருந்தோம் என்பதை மறப்பது போன்றவற்றை 'ஒர்க்கிங் மெமரி லாஸ்' என்போம். இதுபோன்ற நினைவுகள் மூளையின் முன்புறம் உள்ள பகுதியில் சேமித்து வைக்கப்படுகின்றன. 'லாங் டெர்ம் மெமரி' எனப்படுவது மூளையில் உள்ள ஹிப்போ-காம்ப்பஸ் பகுதியில் சேமித்து வைத்துக் கொள்ளப்படுகிறது. ஒரு நிகழ்ச்சியை அப்படியே நினைவில் கொள்வது மற்றும் அது தொடர்பான நிகழ்ச்சிகள் இங்கே சேமிக்கப்படுகின்றன. உதாரணத்துக்கு இரட்டை வணிக கோபுரங்கள் தாக்கப்படும் புகைப்படத்தைக் காணும்போது, அன்று தொலைக்காட்சியில் இது தொடர்பாகக் காட்டியவை ஒருபுறம் நினைவுக்கு வர, அந்த நேரத்தில் வேறென்ன செய்துகொண்டிருந்தீர்கள் என்பதை மறுபுறம் உங்கள் மூளை எடுத்துரைக்கும். இதை 'எபிசோடிக் மெமரி' என்றும் சொல்வோம்."

***நினைவாற்றலை மிகவும் குறைக்கும் டிமென்ஜியா, அல்ஸைமர் நோய் போன்றவை எந்தக் காரணங்களால் ஏற்படுகின்றன?***

"பரம்பரைக்கு இதில் பங்கு உண்டு. எனவே முன்னோர்கள் இது போல் பாதிக்கப்பட்டிருந்தால் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். அதிக அளவில் மது அருந்தினாலும் மூளை பாதிப்பு, நினைவாற்றல் குறைவு ஏற்பட வாய்ப்பு உண்டு. சிலர் மிகவும் உணர்ச்சிவசப்படுபவர்களாக இருப்பார்கள். அவர்களும்

தங்களை மாற்றிக் கொள்வது நல்லது."

**அல்ஸைமர் நோய் என்பது இயல்பாக ஏற்படுவதுதானா அல்லது தலையில் அடிபடுவதாலும் ஏற்படக்கூடுமா?**

"தலையில் பலமாக அடிபட்டுக் கொண்டால் அது தாராளமாக அல்ஸைமர் நோய்க்கு வித்திடலாம். பிரபல குத்துச்சண்டை வீரர் முகமது அலிகூட, போட்டிகளின்போது அவர் தலையில் வந்து விழுந்த வேகமான குத்துக்களின் காரணமாகத்தான் அல்ஸைமர் நோயால் பாதிக்கப்பட்டிருக்கிறார் என்று கண்டு பிடித்திருக்கிறார்கள்."

**உடற்பயிற்சி மூலம் உடலைச் சிக்கென்று வைத்துக்கொண்டால் மூளைச் சிக்கல்களைத் தவிர்க்க முடியுமா?**

"திட்டவட்டமாகக் கூற முடியாது. ஆனால் உடற்பயிற்சிகள் ரத்த அழுத்தம், நீரிழிவு நோய் போன்றவற்றைக் கட்டுக்குள் வைத்துக்கொள்ள உதவுகின்றன. அந்தவிதத்தில் மூளைக்கு ஏற்படக்கூடிய சில பாதிப்புகள் தவிர்க்கப்படுகின்றன. ஆனால் அல்ஸைமர் நோய் போன்றவற்றுக்கும் உடற்பயிற்சிக்கும் உள்ள தொடர்பு சந்தேகமற நிரூபிக்கப்படவில்லை."

**மூளை தொடர்பான சிகிச்சைகள் பெருமளவுக்கு முன்னேறியதாகத் தெரியவில்லையே?**

"மூளை என்பது மிகவும் நுட்பமான பாகம். பாதிக்கப்பட்ட பகுதியை அறுவை சிகிச்சையின் மூலம் சரிசெய்வது என்று இறங்கினால் இதனால் புதுப் பிரச்னைகள் தோன்றலாம். தவிர மூளையில் உள்ள சில நரம்புகள் அறுவை சிகிச்சையின் போது நுட்பமாகப் பாதிக்கப்பட்டால் கூட அது பக்கவாதத்தில் முடியலாம்.

நரம்புச் சிக்கல்களின் காரணங்களை அறிந்துகொண்டால்தானே தீர்வுகள் காண முடியும். அந்த விதத்தில் ஆராய்ச்சிகள் தொடர்கின்றன. அடுத்த சில வருடங்களில் அல்ஷைமர் நோய்க்கான தீர்வு கண்டுபிடிக்கப்படும் என்று நிச்சயம் நம்பலாம்."

**- ஜி.எஸ்.எஸ்.**



# சவாலே

## துறை

**புது அமைச்சரவை பதவியேற்று ஒருவார காலமாகிவிட்டது. மொத்தம் 31 பேர். இதில் 21 பேர் புதுமுகங்கள். 'எப்படி இருக்கப் போகின்றன அமைச்சர்களின் செயல்பாடுகள்?' என்பதுதான் இன்றைக்குப் பலரின் எதிர்பார்ப்பு. இனி இந்தப் பகுதியில் வாரந்தோறும் ஒரு அமைச்சரவை குறித்துப் பார்க்கலாம். முதலில் உணவு மற்றும் பொது விநியோகத்துறை.**

• பொள்ளாச்சி ஜெயராமன்



அரசின் செயல்பாடுகளைப் பற்றி நாடிபிடித்துப் பார்க்க வேண்டுமானால் ரேஷன் கடைகளுக்குச் சென்றால் போதும். அப்படிப்பட்ட முக்கியத்துவம் வாய்ந்தது உணவு மற்றும் பொது விநியோகத் துறை. இந்தத் துறையை சென்ற ஜெயலலிதா ஆட்சியில் கைவசம் வைத்திருந்தவர் பொள்ளாச்சி ஜெயராமன். கலைஞர் ஆட்சியில் இந்தத் துறைக்குப் பொறுப்பேற்றிருப்பவர் எ.வ.வேலு. இவருக்குக் காத்திருக்கும் சவால்கள் என்ன? சொல்கிறார் ஜெயராமன்...

"அம்மா ஆட்சியில் உணவு மற்றும் பொது விநியோகத்துறை நிர்வாகம் மிகச் சீராகவும், சிறப்பாகவும் நடைபெற்றது. விவசாயிகளிடம் இருந்து கொள்முதல் செய்த நெல்லுக்கு உடனுக்குடன் பணம் கொடுக்கப்பட்டது. மூன்று லட்சம் டன் மிகத் தரமான அரிசி, கிலோ ரூபாய் 3.50க்கு விநியோகம் செய்யப்பட்டது. தி.மு.க. ஆட்சிக்கு வந்தாலே தரமற்ற அரிசி விநியோகிக்கப்படும் என்பது பொது மக்களின் கருத்து. அதுவும் இப்போது கிலோ அரிசி இரண்டு ரூபாய் என்று அறிவிக்கப்பட்ட நிலையில் தரமான அரிசி மக்களுக்குக் கிடைக்கும் வாய்ப்பு மிகக் குறைவு. அம்மா ஆட்சியில் 40 லட்சம் புதிய ரேஷன் கார்டுகள் வழங்கப்பட்டன. புதிய ரேஷன் கார்டுகளை உரியவர்களுக்கு வழங்கிய அதே சமயத்தில் 15 லட்சம் போலி ரேஷன் கார்டுகளையும் பறிமுதல் செய்தோம். இன்னும் நான்கு லட்சம் ரேஷன் கார்டுகள் கொடுக்க இருந்த நிலையில் தேர்தல் வந்துவிட்டது. புதிதாகக் கொடுத்த 40 லட்சம் ரேஷன் கார்டுகளுக்கு மண்ணெண்ணெய் வழங்க மத்திய அரசுக்குப் பல கடிதங்களை அம்மா எழுதினார். ஆனால் மத்திய அரசு மாற்றாந்தாய் மனப்பான்மையோடு நடந்துகொண்டு, பதிலேதும் சொல்லவில்லை. புதிய அமைச்சருக்குக் காத்திருக்கும் பெரிய

# சமாளி!

இது புதுசு!

## உணவு மற்றும் பொது விநியோகம்



• எ.வ.வேலு

சவால், 40 லட்சம் குடும்பங்களுக்கு மண்ணெண்ணெய் வழங்குவதுதான்.''

பஸ் கண்டக்டராக இருந்து வாழ்க்கையில் எதிர்நீச்சல் போட்டு, இன்று தனிப்பட்ட முறையிலும் அரசியல் ரீதியாகவும் உயர்ந்த நிலைக்கு வந்திருப்பவர் எ.வ.வேலு. ''தலைவர் மிகுந்த நம்பிக்கையோடு இந்தப் பொறுப்பைக் கொடுத்திருக்கிறார். அவரது எதிர்பார்ப்பை நிறைவேற்றுவேன்'' என்று கூறும் வேலு,

''புதிய ரேஷன் கார்டுகள் லட்சக்கணக்கில் கொடுத்துவிட்டதாகப் பெருமைப்பட்டுக் கொள்வதில் கொஞ்சமும் அர்த்தமில்லை. அவற்றில் எத்தனை லட்சம் போலி என்பதை அடையாளம் காண வேண்டும். உரியவர்களுக்கு ரேஷன் கார்டு கொடுப்பதும் போலிகளை ஒழிப்பதும்தான் முதல் வேலை. அதே சமயத்தில் ஒவ்வொரு ரேஷன் கார்டுக்கும் உரிய பொருட்களை எந்தவிதத் தட்டுப்பாடுமின்றி விநியோகிப்போம். குறிப்பாக மண்ணெண்ணெய் கிடைக்க வேண்டிய ரேஷன் கார்டுகள் எல்லாவற்றிற்கும் மத்திய அரசு ஒத்துழைப்புடன் கண்டிப்பாகக் கொடுக்கப்படும். பொது மக்கள் நலன்களை மறந்துவிட்டு ஆணவத்துடன் மத்திய அரசுடன் மோதியவர்தான் ஜெயலலிதா. மண்ணெண்ணெய் மட்டுமல்ல, எல்லா குடிமை பொருட்களையும் தரமாக, தட்டுப்பாடின்றி விநியோகிப்பது எப்படி என்பது அனுபவசாலியான எங்கள் தலைவருக்குத் தெரியும். அவர் வழிகாட்டுதலில் எந்தவித புகார்களும் இல்லாமல் செயல்படுவோம். அதே போல விவசாயிகளிடம் கொள்முதல் செய்யப்படும் நெல்லுக்கு உரிய பணம் உடனுக்குடன் வழங்கப்படும். அரிசி கிலோ இரண்டு ரூபாய்க்கு விற்கப்படுவதால் தரம் குறைவாக இருக்கும்' என்பது வேண்டுமென்றே சொல்லப்படும் குற்றச்சாட்டு. 'ரேஷன் அரிசி வாங்குவோர், அவர்களுக்கு உரிய அரிசியை அந்தந்த மாதங்களில் தவணை முறையிலோ அல்லது ஒட்டுமொத்தமாகவோ வாங்கிக் கொள்ளலாம்' என்று கலைஞர் பதவியேற்றவுடன் போட்டிருக்கும் உத்தரவு மூலம் மக்கள் நலனில் நாங்கள் கொண்டுள்ள அக்கறை புரிய வரும்'' என்கிறார்.

- கௌசி

படங்கள்: ராஜன்



# கல்கி



2006 மே 28
விய வைகாசி 14
மலர் : 64
இதழ் : 43

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## கடவுள் தீர்ப்பும் கருணாநிதியின் தீர்ப்பும்..!

“சோனியா காந்தி தமிழகத்தில் பிரசாரம் செய்ய வந்தது தியாகச் செயல்” என்று குறிப்பிட்டார் கருணாநிதி. அந்த தியாகத்துக்குப் பரிசாக, தமிழக ஆட்சிப் பொறுப்பிலிருந்து காங்கிரஸை முற்றிலுமாக இன்று விலக்கி வைத்திருக்கிறார்!

“காங்கிரஸ் மேலிடம்தான் ஆட்சியில் பங்கேற்பதில்லை என்று முடிவெடுத்தது” என கருணாநிதி வாதாடலாம்.

“கூட்டணியாகத் தேர்தலில் போட்டியிட்டாலும் சட்ட மன்றத்தில் தனிப்பெரும் பலம் உள்ள கட்சி என்கிற முறையில் தி.மு.க.வுக்கு ஆட்சி அமைக்க முற்படும் உரிமை உண்டு” என்று அவர் சட்டம் பேசலாம்.

ஆனால், தமிழ்நாட்டில் இன்று நடைபெறும் மைனாரிட்டி ஆட்சிக்கு மக்கள் சர்வ நிச்சயமாக வோட்டுப் போடவில்லை; ஜனநாயக முற்போக்குக் கூட்டணிக்குத்தான் வாக்குகள் கோரப்பட்டன; மக்களும் வாக்களித்து ஆதரித்தார்கள். கூட்டணி கட்சிகளுள் கம்யூனிஸ்டுகள் ஆரம்பம் முதலே ஆட்சியில் இடம்பெறப் போவதில்லை என்று கூறிவிட்டனர். பா.ம.க.வும் அவ்வாறே ஏறத்தாழ முடிவெடுத்தது. ஆனால், காங்கிரஸ் அவ்வாறு கூறவில்லை. கூட்டணி ஆட்சி அமைக்க வேண்டும் என்ற ஆவல் அதன் தலைவர்களுள் பலருக்கு இருந்தது. தேர்தல் பேச்செல்லாம் ஆரம்பிக்கும் முன்னரே, ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் இந்த ஆவலை வெளிப்படுத்தப் போக, அதற்காக அவர் கருணாநிதியைச் சந்தித்து மன்னிப்புக் கேட்கும்படி ஆயிற்று!

ஆனால், நிதர்சனம் என்ன என்று பார்த்தால், தி.மு.க.






தனித்துப் போட்டியிடவும் இல்லை; தனி மெஜாரிட்டி பெறவும் இல்லை. இதர கூட்டணி கட்சிகளின் ஆதரவின்றி தேர்தலில் வென்றிருக்கவும் முடியாது, ஆட்சி அமைக்கவும் முடியாது என்கிற நிலையில் இன்று காங்கிரஸை ஏன் ஓரங்கட்ட வேண்டும்? "பாண்டிச்சேரியில் நாங்கள் ஆட்சியில் பங்கு கேட்கவில்லை; நீங்கள் தமிழகத்தில் கேட்காதீர்கள்" என்று சிறுபிள்ளைத்தனமானதொரு ஒப்பந்தத்தை ஏன் திணிக்க வேண்டும்!

தி.மு.க.வின் நிர்ப்பந்தம் காரணமாக, காங்கிரஸ் மேலிடம் (தேசிய தலைமை), தமிழக காங்கிரஸ் தொண்டர்களின் உணர்வுகளைப் புரிந்துகொள்ளாமல் ஒரு முடிவை அவர்கள்மீது திணித்திருக்கிறது.

கூட்டணித் தலைவர்களுடன் தோளுக்குத் தோள் நின்று பிரசாரம் செய்த தி.மு.க. தலைவருக்கு, அவர்களுடைய உள்ளக்கிடக்கை தெரியாமலிருந்திருக்காது. ஆனால், அதைப் புறக்கணித்து, புல்டோசர் அரசியல் நடத்தியிருக்கிறார் அவர்.

காங்கிரஸ் மேலிடம் மறுத்திருந்தால்கூட, அக்கட்சியினர் ஆட்சியில் இடம்பெற வேண்டும் என்று வலிந்து கேட்டுக்கொண்டு, ஆரோக்கியமானதொரு கூட்டணி ஆட்சியை அமைக்க, மூத்த தலைவரான கலைஞர் கருணாநிதி முற்படாமல் போனது தி.மு.க. வரலாற்றில் ஒரு கரும்புள்ளிதான்.

இன்னமும் தாமதமாகிவிடவில்லை. தி.மு.க. தலைவர் தமது பிடிவாதத்தைத் தளர்த்தி, காங்கிரஸை ஆட்சியில் பங்கேற்க அழைத்துக் கொள்ளலாம்.

ஏனெனில், ஜனநாயகம் என்பது வெறும் சட்டங்களாலான ஆட்சிமுறை அல்ல. நல் மரபுகள், பரந்த நோக்கின் அடிப்படையிலான சிறந்த முன்னுதாரணங்கள், மக்கள் தீர்ப்பை மதிக்கின்ற பரிபக்குவம், மக்களின் பிரதிநிதிகளாகவே நாம் ஆட்சியில் இருக்கிறோம் என்ற தன்னடக்கம் - இவைதாம் ஜீவனுள்ள ஜனநாயகத்தின் அத்தியாவசிய கூறுகள்.

இவற்றைக் கருத்தில் கொள்ளாமல், ஒரு மைனாரிட்டி ஆட்சிக்குப் பிடிவாதமாக அடிகோலியிருக்கிறார் கருணாநிதி.

"மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு" என்று அறிஞர் அண்ணா கூறுவதுண்டு. 'மகேசன் தீர்ப்பைக் காட்டிலும் முத்துவேல் கருணாநிதியின் தீர்ப்புதான் முக்கியம்' என்கிற ரீதியில் இயங்குவது கட்சிக்குக் கேடும், ஆட்சிக்கு அபாயமும், தமிழகத்துக்குத் தீங்கும் விளைவிக்கும்.

●




# க்ளோனிங் கோமாதா!

"இந்த சாங்கை உங்க அயனாவரம் அண்ணாவுக்கு டெடிகேட் பண்ணிட லாம்" என்று புன்னகை விநியோகம் செய்பவராக மட்டும் சன் மியூசிக் அனிஷாவைக் குறைத்து மதிப்பிட முடியாது. உயிரி நுட்பம் எனப்படும் பயோ டெக்னாலஜி பற்றி மணிக்கணக்கில் பேசுகிறார் இவர்.

"இன்னைக்கு எப்படி சாஃப்ட்வேர் தொழில் மேல எல்லோரும் மோகமா இருக்காங்களோ அதேமாதிரி அடுத்த தலைமுறைக்கான படிப்பா வளர்ந்துட்டு வருது பயோ டெக்னாலஜி.

இது கஷ்டமான துறை. பயோ டெக்னாலஜி பாடங்களை கதை மாதிரி படிச்சாத்தான் புரியும். சென்னையில இதுக்குப் பெருசா வேலைவாய்ப்பு இல்லை. ஆனா பெங்களூர் மற்றும் வட இந்தியாவுல இதுக்குன்னு பல ஆராய்ச்சி மையங்கள் இருக்கு. வெளி நாடுகளிலுள்ள ஆராய்ச்சி மையங்களில் இந்தப் படிப்புக்கு வேலைவாய்ப்பு கொட்டிக் கிடக்கு.

நம் ரத்தத்துல டி.என்.ஏ.ங்கிற உயிரணுக்கள் இருக்கு. அதிலுள்ள நிறைய விஷயங்களை ஆராய்ச்சி செய்றதுதான் உயிரி நுட்பம். மனித - விலங்கு உடல்கள், மருத்துவம், தாவரங்கள்னு பல துறைகள்ல பயோ டெக்னாலஜியோட பரிசோதனை முயற்சிகள் நடந்துட்டு இருக்கு.

மருத்துவத்துக்கு சமமான துறை இது. கேன்சரை ஒழிக்கவும் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கு. க்ளோனிங் மனுஷனுக்குப் பண்றது தப்புதான். ஆனா மிருகங்களுக்குத் தயங்காம பண்ணலாம். கர்ப்பமாகாத பசுவோட கர்ப்பப் பையிலிருந்து ஒருவித திரவம் எடுத்து, அதை ஒரு குளிரறையில் பாதுகாத்து க்ளோனிங் முறையில இன்னொரு கோமாதாவை உருவாக்கலாம்.

சமீபத்துல விளையாட்டு வீரர்களோட ரத்தத்தைப் பரிசோதனை செஞ்சு அவங்களால இன்னும் வேகமா ஓட முடியும். அதற்கான சக்தி அவங்க ரத்தத்துல இருக்குன்னு நிரூபிச்சிருக்காங்க." என்றெல்லாம் உயிரி நுட்பம் பற்றிய க்ளாஸ் எடுத்தவரை வாயைப் பிளந்துகொண்டு பார்த்தால் ஸ்டைலாகச் சிரித்துக்கொண்டே "சும்மாவா நான் எம்.எஸ்.சி. பயோ டெக்னாலஜி ஸ்டூடண்ட் ஆச்சே. இதுகூட சொல்லாட்டி எப்படி" என்று புதிர் போடுகிறார்.

**- ச.ந.கண்ணன்**

அட்டை, படம் : **அஜீத்**

# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்



**21.5.2006 முதல் 27.5.2006 வரை**

**மேஷம் :** மகிழ்ச்சிகரமான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். தனம், கல்வி, வாக்கு மேலோங்கும். பொருளாதாரச் சிரமம் இருக்காது. உல்லாசப் பிரயாணம் செல்ல நேரிடும். குடும்பத்தில் சுபகாரியம் நடக்கும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி கைகூடும். தொழில் துறையில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். உத்தியோகத்தில் பதவி உயர்வு, இடமாற்றம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாணங்கள் செல்ல நேரிடும். கணவன்- மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைப் பேறு உண்டாகும். நண்பர்கள்/ உறவினர்களால் அனுகூலம் உண்டாகும். வீடு / வாசல் வாங்க நல்ல தருணம். ஆரோக்கியம் பாதிக்காது. வியாபாரத்தில் முற்போக்கான சூழ்நிலை உண்டாகும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வரவும்.

**ரிஷபம் :** வெற்றி தரும் வாரம். எதிர்ப்பு தொல்லைகள் குறையும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வாக்குவன்மை மேலோங்கும். மனத்தில் உற்சாகம் காணப்படும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் இருந்து வந்த சிக்கல்கள் தீரும். குழந்தைகள் பற்றின மனக் கவலை தீரும். நீண்ட நாள் எண்ணங்கள் ஈடேறும். சுபகாரியப் பேச்சு வார்த்தைகள் நடக்கும். செலவுகள் கட்டுக்கடங்காது இருக்கும். பத்திரிகைகளில் பெயர் வரும். உடல்நிலை பாதிக்காது. நெருங்கிய உறவினர் / நண்பர் விலகிச் செல்வார்கள். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குரு / ராகு / கேது வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**மிதுனம் :** மேன்மையான வாரம். குடும்பத்தில் சுபகாரியம் கை கூடும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். வீடு / மனை வாங்க உகந்த காலம். வாக்கு / கல்வி மேன்மை தரும். உடல்நிலை பாதிக்காது. தூர தேசப் பிரயாணம் தேடி வரும். திருமணத் தடை விலகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குடும்பச் சூழ்நிலை நன்றாக இருக்கும். தாயின் உடல்நிலையில் கவனம் தேவை. போட்டா போட்டி, எதிர்ப்பு, தொல்லை விலகும். மனத்தில் புத்துணர்ச்சி ஏற்படும். சிலருக்கு இடமாற்றம் கிட்டும். வேலைப் பளு அதிகரிக்கும். பணக் கஷ்டம் வராது. குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். நண்பர் / உறவினர்களால் அனுகூலம்



ஏற்படும். புதிய தொழில் துவங்கலாம். ராகு / கேது வழிபாடு நற்பலன் தரும்.

**கடகம் :** சிறப்பான வாரம். பெயரும் புகழும் வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடும். புண்ணிய ஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். எதிர்ப்பு, தொல்லை விலகும். பணக்கஷ்டம் ஏற்படாது. உத்தியோகஸ்தர்களுக்கு பதவி உயர்வு, இடமாற்றம் ஏற்படும். புதிய தொழில் துவங்க நல்ல நேரம். மன அழுத்தம் குறையும். மேற்படிப்புக்கு வெளிநாடு செல்லும் ஆசை நிறைவேறும். தெய்வ சங்கல்பத்தில் எல்லாம் இனிதாக நடக்கும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம் :** மன உளைச்சல் நிறைந்த வாரம். எதிலும் நிதானமும் சகிப்புத் தன்மையும் இருந்தால் எதையும் சமாளிக்கும் ஆற்றல் கிடைக்கும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. வண்டி வாங்கும்போது உஷார். கணவன் - மனைவிக்குள் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. வாக்குவாதம் வேண்டாம். உத்தியோகஸ்தர்களுக்கு கவனம் தேவை. இடமாற்றம் நிகழலாம். உடல்நிலையில் கவனம் தேவை. கைப்பொருள்மீது கவனம் தேவை. நெருங்கிய கூட்டாளிகளுக்குள் வாக்குவாதம் வரலாம். வியாபாரத்தில் சற்று முடக்கம் இருக்கும். திருமணத் தடை ஏற்படும். பெற்றோரை விட்டு ரொம்ப தூரம் செல்ல நேரிடும். மறைமுக விரோதிகளால் தொல்லை ஏற்படும். பணக்கஷ்டம் இருக்கும். ராகு / கேது சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**கன்னி :** நன்மையும் தீமையும் கலந்த வாரம். கணவன் - மனைவிக்குள் அனுசரித்து நடந்து கொள்வது நல்லது. வீடு / மனை வாங்க நல்ல காலம். புதிய தொழில் துவங்கலாம். பணக் கஷ்டம் இருக்காது. சுபகாரிய நிகழ்ச்சி நடக்கத் துவங்கும். வெளியூர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். உத்தியோகத்தில் இடமாற்றம் வரலாம். உடல்நிலை பாதிக்காது. வீடு மாற்றம் செய்ய நேரிடும். தூர தேசப் பிரயாணம் வேலை நிமித்தமாக வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். செலவுகள் நல்லவையாக இருக்கும். ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம் :** வழக்கு வெற்றி பெறும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல்கள் தீரும். தனம், வாக்குவன்மை மேலோங்கும். ஆசைகள் யாவும் ஈடேறும். தெய்வ தரிசனம் கிட்டும். உடல்நிலை பாதிக்காது. முயற்சிக்கும் காரியம் வெற்றி தரும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். குடும்பத்தில் சுபச் செலவுகள் ஏற்படும். குழந்தைகள் வழியில் மன சந்தோஷம் கிடைக்கும். நண்பர் /உறவினரால் அனுகூலம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் ரெடி. தொழில் துறையில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். மகான்களின் ஆசி கிட்டும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**விருச்சிகம் :** செல்வாக்கு பெற்ற வாரம். பொன், பொருள் கிடைக்கும். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நண்பர்/உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். நீண்ட காலக் கனவுகள் நிறைவேறும்.

**பதில்**

**எனது மகன் எந்தத் துறையில் பிரகாசிப்பான்? சொந்தத் தொழில் வெளிநாட்டுவேலை எது பொருத்தமாக இருக்கும்?**

**- அ.லட்சுமி, சென்னை**

தங்கள் பையனுக்கு தொழில்நுட்பக் கல்வி நன்கு வரும். வெளிநாடு சென்று படிக்கக் கூடிய வாய்ப்பிருக்கிறது. சொந்தத் தொழில் சரிப்பட்டு வராது. வெளிநாட்டு வேலை நற்பலனைத் தரும்.

**கணவரைப் பிரிந்திருக்கிறேன், பெண்களின் திருமணத்துக்கு கணவரின் உதவி கிடைக்குமா?**

**- எம்.வனஜா,**

பிரிந்து சென்ற கணவர் திரும்பி வருவார். பெண்களின் திருமணம் நடக்கும். கவலையை விடுங்கள்.

**திருமணம் எப்போது நடக்கும்? நல்ல**

**கணவர் அமைவாரா?**

**- ஆஷா நந்தினி**

மேற்கண்ட ஜாதகருக்கு ராகுதசை நடைபெற்று வருகிறது. நல்ல இடத்தில் திருமணம் நடக்கும். நன்கு படித்த, பண்புள்ள, வேலையிலுள்ள பையன் அமைவான்.

**எனக்கு எப்போது திருமணம் நடக்கும்? எத்தகைய வரன் அமைவார்?**

**- உஷா ரஞ்சனி**

சர்ப்பதோஷம் உள்ள வரனைப் பார்த்துச் சேர்த்தால் இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். 29 வயதுவரை சனி தசை நடப்பதால் கஷ்ட தசை ஆகும். அதன்பின் திருமணம் நடக்கும்.

பதில்கள்

குழந்தைகளிடம் மகிழ்ச்சி உண்டாகும். திருமணக் காரியம் கைகூடும். வியாபாரத்தில் நல்ல லாபத்தை அளிக்கும். வேலையில் பதவி உயர்வு, இடமாற்றம், பண உயர்வு ஏற்படும். பத்திரிகைகளில் பெயர் வரும். முடிவு பெறாத சில வேலைகள் சட்டென்று முடிவுக்கு வரும். வீடு / மனை வாங்க நல்ல காலம். புதிய தொழில் துவங்கலாம். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**தனுசு** : உடல் நிலையில் கவனம் தேவை. விபத்துகள் ஏற்பட்டு கை கால்களில் கட்டுப் போடும் சூழ்நிலை உண்டாகும். கவனம் தேவை. பணக்கஷ்டம் வராது. சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். வேலைப் பளு அதிகமாகும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. கணவன்-மனைவிக்குள் உறவு நன்றாக இருக்கும். குழந்தைப் பேறு கிட்டும். தாயின் உடல்நிலை பாதிக்கும். புதிய வீடு / மனை வாங்கலாம். திருமணக் காரியம் கை, கூடும். குழந்தைகளுக்கு மன சந்தோஷம் கிட்டும். நீண்ட காலக் கனவுகள் நிறைவேறும். புதிய தொழில் துவங்குவதை சற்று தள்ளிப் போடவும். சனி / ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**மகரம்** : வெற்றிக் கனியை தட்டிப் பறிப்பீர்கள். மனத்தில் சந்தோஷம் கிட்டும். புதிய முயற்சிகள் கைகூடும். தெய்வ தரிசனம் கிட்டும். மகான்களின் சந்திப்பு கிட்டும். தொலை தூரப் பிரயாணம் வந்து சேரும். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். நண்பர் / உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். குழந்தைகள் வழியில் சுப காரியம் ஏற்படும். புதிய வீடு / மனை வாங்க நல்ல காலம். புதிய தொழில் துவங்க நல்ல தருணம். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். வேலையில் பதவி உயர்வு, இடமாற்றம், புதிய வேலை கிடைக்கும். ஆடை, ஆபரண பொருட்கள் வாங்குவார்கள். வெளி நாட்டு அழைப்புக் கிட்டும். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கும்பம்** : வெற்றி வாகை சூடுவீர்கள். எண்ணங்கள் யாவும் ஈடேறும். பிரிந்த நபர்கள் ஒன்று சேருவார்கள். சத்ரு தொல்லை ஒழியும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. புதிய சொத்துகள் வாங்க நல்ல காலம். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனைத் தரும். உடல்நிலையில் கவனம் தேவை. யாரிடமும் வாக்குவாதம் வேண்டாம். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. வண்டி வாகனத்தில் போகும்போது எச்சரிக்கையாக இருக்கவும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மன சலனம் போகும். மனத்தில் தைரியமும், தன்னம்பிக்கையும் உண்டாகும். ராகு / கேது வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**மீனம்** : மனக் குழப்பம் தீரும். உத்தியோகத்தில் இடமாற்றம் ரெடி. நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வாக்குவன்மை மேலோங்கும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். பண வரவு ஏற்படும். உடல்நிலை பாதிக்காது. எதிர்ப்பு, தொல்லை குறையும். புதிய தொழில் துவங்கலாம். வீடு / மனை வாங்க ஏற்ற காலம். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். நீண்ட கால எண்ணங்கள் யாவும் ஈடேறும். தூர தேச அழைப்புகள் வந்துசேரும். ராகு / கேது / குரு / வழிபாடு நற்பலனைத் தரும். ●



எல்லோரும் வந்தாச்சா? யாரோ ஒருத்தர் குறையற மாதிரி தோணுதே?

**ராதிகா:** கரெக்ட்டுங்க. விஜய டி.ராஜேந்தருக்குச் சொல்ல மறந்துட்டேன். கடைசி நேரத்துல கவனம் வந்து போன் பண்ணிச் சொல்லியிருக்கேன்.

**சரத்குமார்:** வருவாரா?

**ராதிகா:** வருவார். 'முதல்லயே சொல்லாம விட்டதுக்கு மன்னிச்சுடுங்க அண்ணா. இந்த தங்கச்சி பேச்சுக்கு மதிப்புக் கொடுத்து வாங்கண்ணா'ன்னு சொன்னேன். உடனே மனுஷன் உருகிப்போய்... அதோ வந்துட்டாருபாருங்க.

**பாக்யராஜ்:** வாங்க சார். கடைசி நேரத்துல கூப்பிட்டதும் இப்படித்தான் விழுந்தடிச்சு ஓடி வர்றதா? கொஞ்சமாச்சும் முறுக்கு வேணாமா? நீங்க எவ்வளவு பெரிய

# "நானொரு பாவி... துடிச்சுப் போச்சு ஆவி!"

முடிந்தது தேர்தல். கட்சிக்காரர்களுக்கு மொத்தமாக கால்ஷீட்டைக் கொடுத்து, படு பிஸியாக இருந்த கோலிவுட்காரர்களுக்குக் கிடைத்தது ரிலாக்ஸ். ஒரு காபி ஷாப்பில் எல்லோரும் கூடுகிறார்கள்.

**சரத்குமார்:** என்ன



சீனியர்?

**டி.ராஜேந்தர்:** பாசத்துக்குக் கட்டுப்பட்டவன் இந்த டிஆரு. அதை தப்புன்னு சொல்ல நீ யாரு? அண்ணான்னு கூப்பிட்டாங்க ராதிகா. அது போதும்டான்னு வந்துட்டான் டிஆரு. இதுக்கு எதுக்கு முறுக்கு? சொல்றவனுக்குக் கிறுக்கு.

**செந்தில்:** டென்ஷன் ஆகாதீங்கண்ணே. ஏங்க அதுதான் வந்துட்டாரே. சும்மா இருக்க வேண்டியது



தானே. ஏன் வாயைக் கிளர்றீங்க? அவர்தான் உணர்ச்சிக் குழம்பாச்சே.

**விசு:** செந்தில் தம்பி, அது குழம்பு இல்லப்பா பிழம்பு.

**செந்தில்:** அட விடுங்க. ஒரு எழுத்துதானே மாத்திச் சொல்லிட்டேன்.

**விசு:** ஒரு எழுத்துங்கறது உனக்கு அவ்வளவு சாதாரணமா போச்சா? ஒரு எழுத்து மாறினதால எத்தனை பேரோட தலையெழுத்து மாறி இருக்குன்னு தெரியுமா? முதல்ல எழுத்துன்னா என்னன்னு தெரியுமா? சொன்னா உனக்குப் புரியுமா? புரிஞ்சாலும் ஒரு எழுத்தை உன்னால உருவாக்க முடியுமா? அந்த எழுத்து இந்த எழுத்துக்கு ஈடாகுமா? இல்லே இந்த எழுத்தை...

**சிம்ரன்:** ஸ்டாப்! ஸ்டாப்! அவர் என்ன சொல்லிட்டார்னு இந்தப் பெரியவர் இப்டி நான் ஸ்டாப்பா பேஸ்றார்? மிஸ்டர் சரத். இவரை சும்மா இர்க்கச் சொல்ங்கோ.

**விசு:** யாரைப் பார்த்து மேடம் சும்மா இருக்கச் சொல்றீங்க? நான் எப்படிப்பட்ட ஆள்னு தெரியுமா? நீ வர்றதுக்கு முன்னாடி நான் பீல்ட் அவுட்டாகி டி.விக்குப் போய்ட்டதால வாய்க்கு வந்ததைப் பேசாதே. சரளா பார்த்துட்டு நிற்கறியே... சொல்லும்மா.

**கோவை சரளா:** இந்தா... காபி குடிக்க வந்தோமா குடிச்சுட்டு ஊருக்குப் போனோமான்னு இரு. பெரிய மனுஷி மாதிரி பேசிட்டிருக்காதே.

**சரத்குமார்:** எல்லோரும் கொஞ்சம் சும்மா இருக்கீங்களா? இப்படி ஆளாளுக்கு சண்டை போட்டுக்கவா கூப்பிட்டேன்? அப்புறம் நானும் ராதிகாவும் எதிர்ல இருக்கற வேற காபி ஷாப்புக்குப் போய்டுவோம் ஜாக்கிரதை.



**ராதிகா:** இதோ பாருங்க எலக்ஷன் முடிஞ்சுபோச்சு. இதோட அஞ்சு வருஷம் கழிச்சுத்தான் வரும். அது வரைக்கும் நாம என்ன செய்யலாம்னு பேசறதுக்குத்தான் இங்கே கூப்பிட்டது.



**பாக்யராஜ்:** என்ன பண்றது? வழக்கம்போல அவங்கவங்க பிழைப்பைக் கவனிக்க வேண்டியதுதான். நேத்து சன் டி.வி பக்கம் போனேன். ரிசப்ஷனிஸ்ட் என்னைப் பார்த்து நீங்க யாருன்னு கேட்கறா... 'என்னம்மா என்னைத் தெரியலையா? நான்தான் பாக்யராஜ்'னு சொன்னேன். 'ஓ! 'முந்தானை முடிச்சு' டைரக்டரா? நான் குட்டிப் பொண்ணா இருந்தப்ப பார்த்தேன்'னு சொன்னா.

'அதுக்கப்புறம் என்னைப் பார்க்கலையா? பேட்டி கொடுக்கறதுக்காக இங்கே வந்திருக்கேனே'ன்னு சொன்னா... அப்படியான்னு ஆச்சர்யமா பார்க்கறா.

**டி.ராஜேந்தர்:** நீங்க பரவாயில்லை சார். ரிசப்ஷனிஸ்ட்தான் கேட்டா. நேத்து நான் கலைஞர்கிட்டே போன்ல பேசினேன். 'உங்க அன்புத் தம்பி பேசறேன்'னு சொன்னேன். மகன், மருமகன், பேரன் வார்த்தைகளுக்கு அர்த்தம் தெரியும். அது என்ன தம்பி? அதற்குப் பொருள் விளம்பிடு'ன்னு கேட்டாரு ஒரு கேள்வி. ஐயோ நான் ஒரு பாவி. துடிச்சுப் போச்சு ஆவி!



**விசு:** சரி சரி அழாதீங்க... நீங்க யாருன்னு அவர் கேட்டதால நீங்க யாருன்னு யாருக்கும் தெரியாமப் போய்டுமா? இல்லே நீங்க நீங்கதான்னு சொல்றதால நீங்க நீங்க இல்லேன்னு ஆய்டுமா? நீங்க நீங்கதான். அவர் அவர்தான். நீங்க அவராக முடியாது. அவர் நீங்க ஆக முடியாது.



**ராதிகா:** இந்தப் பக்கம் மட்டும் என்ன வாழுதாம்? நேத்து நானும், சரத்தும் அம்மாவைப் பார்க்கறதுக் காகப் போனோம். காலையிலிருந்து காத்திருந்து காத்திருந்து கால் வலிச்சதுதான் மிச்சம். யாரும் உட்காரக்கூட சொல்லலை.

**சரத்குமார்:** அது மட்டுமில்லே... நாங்களா உட்கார்ந்துடக் கூடாதுன்னு அங்கே இருந்த சோபா, நாற்காலிகளைக் குப்புறப் போட்டு வெச்சிருந்தாங்க. குடிக்கறதுக்கு தண்ணிகூட கொடுக்கலை. நாங்களா கேட்டப்பவும் 'பழைய பாக்கியைத் தரலைன்னு தண்ணி கேனைப் போடறவன் வர்றதில்லை. நாங்களே பக்கத்து வீட்லதான் கேட்டுக் குடிக்கிறோம்'னு சொல்றாங்க.

**சிம்ரன்:** நீங்க அல்லாம் பேஸ்றது எனக்கு ஆஸ்யர்மா இர்க்கு. நேத்து நான் மேடமைப் பார்த்தப்ப 'எப்டி இர்க்கே? கொயந்த நல்லா இர்க்கா? இன்னும் ஊர்க்குப் போலையா? நான் வேணும்னா டிக்கெட்டுக்குச் சொல்லட்டுமா'ன்னு கேட்டாங்க.

**கோவை சரளா:** க்கும்... ஊருக்கு மூட்டை கட்டிட்டு கிளம்புன்னு சொல்லி இருக்காங்க. அது புரியாமப் புல்லரிச்சுப் போய்ட்டியாக்கும்.

**செந்தில்:** சரி, இப்ப நாம என்னதான் பண்றது? பொழைப்புக்கு என்ன வழி? அதைச் சொல்லுங்கப்பா...

**டி.ராஜேந்தர்:** மரத்தை வெச்சவன் ஊத்துவான் பச்சைத் தண்ணி. அதனால இப்போ குடிப்போம் காபித் தண்ணி. கடிகாரம் சுத்தறது நிற்காது. காலம் எப்பவும் இப்படியே இருக்காது. என் பையன் பேரு சிம்பு. அவனை வெச்சு வருங்காலத்துல கிளப்பறேன் வம்பு.

*(எல்லோரும் ஒருவருக்கு ஒருவர் ஆறுதல் சொல்லிக்கொண்டு காபியைக் குடிக்கிறார்கள்.)*

கற்பனை : **குசும்புராஜ்**

## இறைக்க இறைக்க நீர் ஊறும்; உழைக்க உழைக்க பணம் சேரும்; சிறந்த நூல்களைப் படிக்கப் படிக்க ஞானம் உண்டாகும்

| | |
|---|---|
| ஸ்ரீ மீனாட்சி கலிவெண்பா | 35.00 |
| பால ராமாயணம் | 22.00 |
| பால பாரதம் | 30.00 |
| பால கந்த புராணம் | 21.00 |
| ஞானக் குழந்தைகள் | 33.00 |
| முருகனைப் பாடிய மூவர் கதைகள் | 20.00 |
| வேதங்கள் கூறும் தர்ம சாஸ்திரங்கள் | 30.00 |
| இந்து மத நன்னெறிகளும் சம்பிரதாயங்களும் | 50.00 |
| தல யாத்திரை (பத்ரி, கேதார், துவாரகா etc) | 35.00 |
| An Introduction to the Vedas | 60.00 |
| ஜோதிர்லிங்க தல யாத்திரை | 60.00 |
| மஹாராஷ்டிர மாநில தல யாத்திரை | 40.00 |
| நவக்கிரக தல யாத்திரை | 70.00 |
| பாபாவின் பொன் மொழிகள் | 65.00 |
| உலக மதங்கள் கூறும் நல்லுரைகள் | 35.00 |
| மங்கல வாழ்வுக்கு மணியான யோசனைகள் | 24.75 |
| மகான்களின் அறிவுரைகள் | 35.00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் | 35.00 |
| அகில பாரத திருத்தல யாத்திரை (2 Vols) | 140.00 |
| நம்மாழ்வார் நோக்கில் நவதிருப்பதிகள் | 35.00 |
| நியாய சாஸ்திர விளக்கம் | 20.00 |
| முகலட்சண சாஸ்திரம் | 40.00 |
| ஞானத் தத்துவங்கள் 1008 | 55.00 |
| ஞானக் கேள்விகள் 1008 | 42.00 |
| ஞானத் தகவல்கள் | 30.00 |
| வடமொழி இலக்கியம் | 15.00 |
| ராமாயணத்தில் உபகதா பாத்திரங்கள் | 20.00 |

### சைவ தத்துவம்

Dr. க.வ. தகாரே (தமிழில் கா.ஸ்ரீ.ஸ்ரீ.)

அனைத்து சைவ கோட்பாடுகளையும் அடக்கிய ஒரே தமிழ் நூல் - ரூ.100/-

### பி.என். பரசுராமன்

| | |
|---|---|
| அஷ்டாவக்ரர் உபதேசங்கள் | 35.00 |
| பீஷ்மர் சொன்ன தத்துவக் கதைகள் | 60.00 |
| 'பர்த்ருஹரியின்' நீதி சதகம் | 21.00 |
| 'பர்த்ருஹரியின்' வைராக்கிய சதகம் | 20.00 |
| சனத்குமாரரின் உபதேசங்கள் | 35.00 |
| விதுர நீதி | 35.00 |
| விபூதி ருத்ராட்சம் மகிமை | 37.00 |
| சித்தர்கள் சரித்திரம் | 35.00 |
| யட்சப் பிரச்னம் - பிரச்னோத்ர ரத்னமாலிகா | 25.00 |
| ஊருக்கு நல்லது சொல்வேன் | 50.00 |
| அம்மன் சந்நிதி அற்புதங்கள் | 30.00 |
| சித்ரகுப்தன் கதைகள் | 24.00 |

### காஞ்சி காமகோடி ஜகத்குரு பூஜ்யஸ்ரீ மஹா ஸ்வாமிகள் வரலாறு

*(2 பாகங்கள்)* ரூ. 500/-

### இந்து மத உபாக்கியானம்

1908 முதல் நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து வரும் ஒரே தமிழ் நூல். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் மொழிகளில் 5,00,000 பிரதிகளுக்கும் மேல் விற்பனையாகியுள்ள புத்தகம்.

விலை ரூ.50.00

### A.V. சுகவனேச்வரன்

| | |
|---|---|
| வேதம் வணங்கும் தெய்வங்கள் | 30.00 |
| வேத காலத்தில் பெண்கள் நிலை | 30.00 |
| வேதம் சொல்லும் கதைகள் | 60.00 |
| உள்ளம் கவரும் உபநிடதக் கதைகள் | 22.00 |

### A.V. சுப்ரமணியம்

| | |
|---|---|
| நயம் நிறைந்த நீதிகள் (சமஸ்கிருதத்திலிருந்து சுவையான நீதிகள்) | 45.00 |
| வடமொழி இலக்கிய வழிகாட்டி (வேதம் முதல் இன்று வரை) | 60.00 |

### எம். ராதாகிருஷ்ண பிள்ளை

| | |
|---|---|
| தென்னாட்டுக் கோயில்கள் (4 Vols) | 260.00 |
| வட நாட்டுக் கோயில்கள் | 42.00 |
| சுகர் கூறிய கண்ணன் கதை | 30.00 |
| பாகவதக் கதைகள் | 30.00 |
| பாரத நதிகள் | 16.50 |

### பி.ஸ்ரீ.

| | |
|---|---|
| ஆறுபடை வீடுகள் (6 Vols) | 210.00 |
| ஆழ்வார்கள் வரலாறு (8 Vols) | 306.00 |
| கந்த புராணக் கதைகள் | 40.00 |
| நாரதர் கதை | 25.00 |
| நவராத்திரியின் கதைகள் | 23.00 |
| ராஜரிஷி விசுவாமித்திரர் | 30.00 |
| தாயுமானவர் | 45.00 |
| தசாவதாரக் கதைகள் | 32.00 |
| ஔவையார் | 16.50 |

**மஹாபாரதம்** பேசுகிறது (2 பாகங்கள்) ரூ.500/-

**சோ** எழுதிய

வால்மீகி **ராமாயணம்** (2 பாகங்கள்) ரூ.500/-



அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிலையம்)

பாக்ஸ். 244, ராமகிருஷ்ண மடம் சாலை
மயிலாப்பூர், சென்னை 600 004
தொலைபேசி: 24 64 13 14
e-mail: srinivasan@alliancebook.com
visit us at: www.alliance book.com

ஜீவாவை தற்செயலாகத்தான் மறுபடி சந்திக்க நேர்ந்தது. எனது மீசை மழித்த முகமும் வாழ்வின் போராட்டங்களில் பின்வாங்கிய தலைமுடியும் மீறி, சின்ன வயசு அடையாளமான சோடா பாட்டில் மூக்குக் கண்ணாடி ஜீவாவுக்கு என்னை அடையாளம் காட்டியிருக்க வேண்டும்.

''என்னடா சங்கர்... எப்படி இருக்கே''

கல்யாண மண்டபத்தில் முதல் நாள் விழா. பெண்ணின் தகப்பனார் இலக்கிய ஆர்வலர். கவிதைத் தொகுப்பு வெளியிட்டு பிரபலங்களை வரவழைத்து இலக்கியக் கூட்டமாய் நடத்திக் கொண்டிருந்தார். உள்ளூர்க்காரன் என்கிற முறையிலும் குடும்ப பரிச்சயம் உள்ளவன் என்பதாலும் நானும் வந்திருந்தேன். உண்மையில் என் அப்பாவுக்குத்தான் பழக்கம். வலது கை, வலது கால் ஒத்துழையாமை இயக்கம் நடத்திக் கொண்டிருப்பதால் அப்பாவால் வரமுடியவில்லை. என்னை வற்புறுத்தி அனுப்பியிருந்தார். சுந்தரேசய்யரின் ஆசிகள் என்று எழுதப்பட்ட ஐம்பத்தொரு ரூபாய் கவர் என் சட்டைப் பையில் இருந்தது. ஜீவா என்னுடன் தான் படித்தான். கதை, கவிதைகளில் அப்போதே நாட்டமுண்டு. அதை விடவும் என்னைக் கேலி செய்வதில். பள்ளி இறுதி வகுப்புடன் என் படிப்பு முடிந்து போக அவன் எல்லை விரிந்து போனது.

ஒரு வார இதழில் அவன் கதை - பாத யாத்திரை - நகைச்சுவையுடன் யதார்த்த அரசியலைப் படம் பிடித்துக்காட்டி எல்லோர் கவனத்தையும் ஈர்த்தது. அதன் ஆசிரியருக்கு நான் எழுதிய வாசகர் கடிதத்தைப் பார்த்துவிட்டு பதில் போட்டிருந்தான்.

'சங்கரா.. எப்படி இருக்கே'

உள்ளூர் பிள்ளையார் கோயில் என்னை வாழவைத்துக் கொண்டிருந்ததை அவனுக்கு எழுத எனக்கு விருப்பமில்லை. பதில் போடாமல் விட்டு விட்டேன்.

ஜீவா இப்போது மிகப் பிரபலம். சட்டென்று அவனைச் சுற்றி ஒரு கூட்டம். என்னைப் புறந்தள்ளிவிட்டு நகர்த்திப் போனது. முன்வரிசையில் அவனை அமர வைத்தனர்.

விழா ஆரம்பித்துவிட்டது. பெண்ணின் தகப்பனார் மேடையேறினார்.

"வழக்கமான மாப்பிள்ளை அழைப்பாயில்லாமல் இலக்கிய அழைப்பாக வைத்துக்கொள்ள விரும்பினேன். ஒத்துழைத்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி."

ஒவ்வொருவராகப் பேச அழைத்தார். ஜீவாவின் அருகில் அமர்வதைப் பெருமையாக நினைத்து ஒரு கூட்டம் சூழ்ந்திருந்தது.

புன்னகை மாறாமல் தணிந்த குரலில் அவன் பேசுவதைத் தொலைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தேன்.

நல்லவேளை அப்பா இங்கு வரவில்லை. அப்பாவை அவன் என்னமாய் விரட்டியிருக்கிறான்.

# ஊச்சமில்லாத பேனா!

'அது என்ன... செத்துப்போனவங்களுக்கு நீங்க செய்யற சடங்கு தெரியப் போவுதா... இப்ப சொன்னீங்களே... அந்த மந்திரம்... அதுக்கு அர்த்தம் என்ன... நீங்க சொன்னது இதோ இவருக்கே

புரியலையே... இவரோட அப்பா... அதுவும் ஆவி... எப்படிப் புரிஞ்சுக்கிட்டு வருவாரு!" கூட நின்றவர்கள் கேலியாகச் சிரிக்கவும் அப்பாவால் பதற்றத்தை அடக்க முடியவில்லை. எதிரே வெற்றிலை பாக்கு பழத்துடன் பத்து ரூபாய் நோட்டு காற்றில் படபடத்துக் கொண்டிருந்தது.

'இதுக்குத்தானே இந்தப் பொய்... இல்லியா...'

ஜீவா நிதானமாகக் கேட்டதும் அப்பா சட்டென்று எழுந்துவிட்டார். எதுவும் பேசாமல் தமது கைப்பையுடன் வந்துவிட்டார். அன்று மாலை அவரை அழைத்திருந்தவன் வந்து மன்னிப்பு



**ரிஷபன்**

''ஆபரேஷன் பண்ணின இடத்துல காந்தத்தை வச்சு வச்சுப் பாக்கறீங்களே, இது புதுவிதமான சிகிச்சையா டாக்டர்.''

''கத்தியை யார் வயித்துல வச்சு தைச் சேன்னு தெரியல, அதைத்தான் தேடிப் பாக்கறேன் பேசாம படுய்யா.''

- ஜோசப் காமராஜ்



கேட்டு தட்சணையை நீட்டினான்.

''வேணாம்பா...'' பிடிவாதமாய் மறுத்துவிட்டார்.

அப்பாவின் வெளிப்படாத சோகம் என்னை ஏதோ ஒரு விதத்தில் பாதித் திருக்க வேண்டும். ஜீவாவுடனான என் நட்பு அதன் பிறகு ஒரு வரையறைக்கு உட்பட்டே இருந்தது. முழுவதுமாய் அவனை என்னால் விலக்கவும் முடிய வில்லை. அவனை கருத்து ரீதியாக என் னால் ஏற்க முடியாவிட்டாலும் அவனின் தர்க்க ரீதியான பேச்சு என் ரசனையைக் கவர்ந்திருந்தது. கூடவே அவனது இலக் கிய முயற்சிகளும்.

அருமையாக எழுதுவான். நண்பர்கள் மத்தியில் அவன் எழுதியதை ஒருவர் படிக்க பிறர் கேட்டு கைதட்ட என்று அமர்க்களமாய்ப் பொழுதுபோகும்.

''ஏண்டா... அப்பாவை அவன் எவ் வளவு அவமானப்படுத்தினான்... அப்புற மும் அவனோட என்ன சகவாசம்?''

அம்மாவிடம் தைரியமாகப் பேச முடியும். ''இல்லம்மா. அவன் ரொம்ப புத்திசாலி. 'என்னைச் சுற்றி ஆயிரம் முகமூடிகள். நான் மட்டும் முகமற்று.' எப்படி இருக்கு பார்த்தியா...''

''புரியலைடா''

''அப்பாவின் பிரியம்கூட அம்மாவின் மேல் வன்முறையாய்...' இது புரியற தாம்மா.'' அம்மாவுக்குப் புரிந் தது. இந்தக் கவிதையும், என் சிநேகமும்.

**கூ**ட்டம் ஒருவழியாய் முடிந்து விட்டது. ஜீவாவைச் சாப்பிட அனுமதிக்காமல் அவனைச் சுற்றி சிலர். திடீரென ஒரு உரத்த குரல். வந்த திசை நோக்கித் திரும்பினால் அவரும் கவிஞர் தான். 'மடக்குதிரை' என்கிற பெய ரில் ஒரு சிற்றிதழும் நடத்துகிறார்.

''சீரியலுக்குக் கதை வசனம் நீதானா...''

வேகப்பட்டவர்களை அடக்கி விட்டு புன்னகைத்தான் ஜீவா.

''ஆமாம்.''

''ஏண்டா இப்படி ஊரை ஏமாத்தறே... பணம் கிடைக்கிற கார ணத்தால... டீவிக்கு முன்னால முடங்கிப் போகிற ஒரு கூட்டத்தை உருவாக்கி வச் சிருக்கியே... எந்த லாஜிக்கும் இல்லாம... எந்தக் கதாபாத்திரத்தையும் கேவலப் படுத்தி எழுதற உன் பேனாவுக்குக் கூச்சமே இல்லியா...''

''ரேட்டிங்ல அவர் எழுதற சீரியல் தான் நம்பர் ஒன். தெரியுமா'' யாரோ கத்தினார் ஜீவாவுக்கு ஆதரவாக.

''ஆமா... ஜனங்களை ஏமாத்தறதுல நம்பர் ஒன். அடப்போடா... பாத யாத் திரை எழுதின ஒரு அற்புத பேனா இன் னிக்குச் சோரம் போயிட்டிருக்கு. ரெண்டு பொண்டாட்டி. பணத்துக்காக எதையும் செய்யற கதாபாத்திரங்கள், மெகா சீரியலா வளர்க்க நம்பவே முடியாத... வாழ்க்கையின் நம்பிக்கைகளையே தொலைத்துவிடுகிற காட்சிகள்... ச்சே...''

சட்டைப்பையிலிருந்து சில ரூபாய் நோட்டுகளை எடுத்துக் காற்றில் வீசினார்.

''இதுக்குத்தானே... இந்தப் பொய் வாழ்க்கை...''

அதே கோபத்தோடு வெளியே போய்விட்டார்.

''குடிச்சுட்டு வந்து இலக்கியக் கூட்டத் துல கலாட்டா பண்றதே பொழப்பாப் போச்சு... நீங்க விடுங்க.''

ஜீவாவைச் சாப்பிட அழைத்துப் போனார்கள்.

சாப்பிடாமல் வெளியே வந்தாலும் மனசு என்னவோ நிறைந்திருந்தது. ●



# காஞ்சி கிருஷ்ணா

பொதுவாக எல்லோருக்குமே தத்தமது வீடுகளில் மரம் வளர்க்க ஆசையிருக்கும். சிலருக்கு வாழை, சிலருக்கு தென்னை இன்னும் சிலருக்கு வேப்பமரம் என்று விருப்பம் இருக்கும். பல்வேறு நம்பிக்கைகளில் இவற்றை வளர்ப்பார்கள். வெண்டை, கத்திரி என்று தோட்டம் போடுவதும் உண்டு. ஆனால் இப்படிப் பட்ட மரங்களோ அல்லது தோட்டமோ கூட வாஸ்துபடி சரியான இடத்தில் அமையவில்லை என்றால், பிரச்னைகள் வர வாய்ப்புகள் உள்ளதென்பது நம்மில் எத்தனை பேருக்குத் தெரியும்!

எனக்குத் தெரிந்த நண்பர் ஒருவர், "என் வீட்டில் எல்லா வசதிகளும் இருக்கின்றன. பணத்துக்கும் எந்தப் பிரச்னையும் இல்லை. ஆனால் நிம்மதி இல்லை. எப்போதும் பிரச்னையாகவே இருக்கிறது. வாஸ்துபடி வீட்டில் ஏதோ பிரச்னை என்று நினைக்கிறேன். நீங்கள் வந்து பார்த்து, ஏதாவது பரிகாரம் செய்ய முடியுமா" என்று கேட்டார். "சரி. பார்த்துவிடலாம்" என்று ஒரு நாள் புறப்பட்டு அவர் வீட்டுக்குச் சென்றேன்.

வெளியில் இருந்து பார்க்கும்போதே வீடு படு கம்பீரமாக இருந்தது. போர்டிகோவில் ஏஸி போட்டிருந்ததுபோல குளுகுளுவென இருந்தது. காம்பௌண்டுக்குள் பச்சைப்பசேல் மரங்கள். வீட்டுக்கு உள்ளேயும் படுஅம்சமாக இருந்தது. வீட்டைச் சுற்றிப் பார்த்தேன். வாஸ்துப்படி எல்லாமே சரியாகத்தான் இருந்தது. பிறகு என்னதான் பிரச்னை என்று யோசித்தபடியே தோட்டத்தை வலம் வந்தபோது பிரச்னை பிடிபட்டு விட்டது.



அந்த வீடு தெற்குப் பார்த்து இருந்தது. பின்புறம் வடக்கே அந்த வீட்டின் அளவுக்குச் சரிசமமாக காலி நிலம் இருந்தது. அந்த நிலத்தில் தான் தென்னைமரம், மாமரம், கறிவேப்பிலை மரம், எலுமிச்சைச் செடிகள் ஆகியவற்றைப் பயிரிட்டு, தோட்டமாக்கி இருந்தனர். அதில் தென்னை மற்றும் கறிவேப்பிலை மரங்கள் உயரமாகவும், பலமாகவும் வளர்ந்திருந்தன. அவைதான் நிம்மதியின்மைக்குக் காரணம் என்று நண்பரிடம் சொன்னேன். 'எப்படி' என்றார். "வளர்ந்த மரங்களுக்கு அவற்றுக்கே உரிய சக்தி உண்டு. வடக்குப் பக்கத்தில் பெருமளவில் மரங்களை வளர்த்ததால் நிலத்தின் சமநிலை தவறிவிட்டது." என்று நான் விஷயத்தை விளக்கிய உடனேயே, "பிரச்னை மரம்தான் என்றால் உடனே அவற்றை வெட்டிவிடச் சொல்கிறேன்" என்றார் நண்பர் அதிரடியாக.

நான் "மரத்தை வெட்ட வேண்டிய அவசியமில்லை.

## கேளுங்கள் சொல்கிறேன்!

எங்கள் வீட்டுக்குள்ளேயே மாடிப்படிகள் இருக்கின்றன. அந்தப் படிக்கட்டுகள் சுற்றிச் சுற்றி செல்வதுபோல இருக்கும். இவ்வாறு இருப்பது வாஸ்துபடி தவறா?

– அ.முத்துராமன், விருத்தாசலம்

அதிக இடத்தை அடைத்துக்

ஒரு பொருளை அழித்து உயர்வதை விட, இன்னொரு பொருளை உருவாக்கி உயர்வது நல்லது'' என்று சொல்லிவிட்டு, மாற்று





# நிம்மதியைப் பறித்த மரங்கள்!

ஏற்பாட்டைச் சொன்னேன். அதாவது, அந்த வீட்டின் மேற்குப் புறத்தில் மணற்பாங்கான இடம் காலியாக இருந்தது. அதில் மேலும் சில மரங்களை நடச் சொன்னேன். அந்த இடத்தில் தென்னை மரங்களும் நடுநடுவே வாழை மரங்களும் நடப்பட்டன.

அப்படி நடப்பட்ட மரங்கள் இப்போது நன்கு வளர்ந்துவிட்டன. மரங்கள் வளர, வளர அவர்களது பிரச்னையும் சிறிது சிறிதாகக் குறைந்துவிட்டன. இப்போது நண்பர் வீட்டினர் நல்லமுறையில் இருக்கிறார்கள்.

பொதுவாக வீடுகளில் புளியமரம், வேலமரம், அரசமரம், ஆலமரம் போன்றவற்றை வளர்க்கக் கூடாது. தேவைப்பட்டால் முருங்கை மரத்தை காம்பௌண்டுக்கு வெளியே வளர்க்கலாம். சரி, எவற்றை வீட்டில் வளர்க்கலாம்? மா, தென்னை, வாழை, வேம்பு, எலுமிச்சை, பலா, கறிவேப்பிலை மரங்களைத் தாராளமாக வளர்க்கலாம்.

படம் : ஸ்ரீஹரி

கொள்ளாமல் இருப்பதற்காகவோ அல்லது அழகுக்காகவோ இப்படிக் கட்டுவது வழக்கம்தான். ஆனால் படியில் ஏறுகின்றபொழுது கடிகார சுற்றுப்படி இருந்தால் பிரச்னை இல்லை. அதுவே எதிர் கடிகார சுற்றுப்படி இருந்தால் சிக்கல்தான்.

***எங்கள் வீட்டு வாசலில் நான்கு ஏறுபடிகள் உள்ளன. அதனை அடுத்து ஐந்து இறங்குபடிகள் உள்ளன. இப்படி இறங்குபடி வழியாக வீட்டுக்குள் செல்வது நல்லதா?***

***- ராஜலட்சுமி, தாராபுரம்***

உங்கள் வீடு மேற்கு / தெற்கு பார்த்து இருந்தால் எந்தப் பிரச்னையும் இல்லை. அதுவே மாறி இருந்தால் பிரச்னைதான்.

## பாலிடிக்ஸ் பஜார்

# தந்தியிடமிருந்து கரனுக்கு...

தேர்தல் நெருக்கத்தில், தான் நடத்தி வந்த கட்சியை தி.மு.க.வில் இணைத்து, இளையான்குடி தொகுதியில் நின்று வென்றார் ராஜ.கண்ணப்பன். கலைஞர் அமைச்சரவையில் இவருக்கும் இடம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் கிடைக்கவில்லை. "அண்ணனுக்கு வேறு அசைன்மெண்ட் கொடுக்கப்பட்டிருக்கு. ஆறு மாத காலத்தில் அ.தி.மு.க.வில் பிளவு ஏற்படுத்த வேண்டும். இது தான் இனி அண்ணன் வேலை" என்கிறது கண்ணப்பனுக்கு நெருங்கிய வட்டாரம்.

உள்ளாட்சி, ஊரக







வளர்ச்சி, வறுமை ஒழிப்புத் திட்டங்கள் ஆகிய துறைகள் ஸ்டாலின் கைவசம் போய்விட்டன. வளர்ச்சிப் பணிகளுக்கு மத்திய அரசு கொடுக்கும் ஆயிரக்கணக்கான கோடி ரூபாய்கள் இந்தத் துறைகள் மூலமாகத்தான் அடிமட்டம் வரை செல்கிறது. இந்தத் துறைகள் தங்களுக்குக் கிடைக்கும் என்று சீனியர்களான கோ.சி.மணியும், வீரபாண்டி ஆறுமுகமும் எதிர்பார்த்தார்களாம்.

அ.தி.மு.க. பலம் பொருந்திய எதிர்கட்சியாக வந்திருப்பதால் சட்டசபையை சுமூகமாகக் கொண்டு செல்ல துரைமுருகனை சபாநாயகராகப் போடலாம் என தி.மு.க. தலைமை முடிவெடுத்து இருந்ததாம். ஆனால் துரைமுருகன் அந்தப் பொறுப்பு வேண்டவே வேண்டாம் என்று பிடிவாதம் பிடித்து மறுபடியும் பொதுப் பணித் துறை அமைச்சர் பதவியை வாங்கி விட்டார்.

அ.தி.மு.க. ஆட்சியில் 'தினத்தந்தி' பத்திரிகைக்கு மட்டும் மிக அதிக விளம்பரக் கட்டணம் நிர்ணயம் செய்து கொடுத்து வந்தது தமிழக அரசு. இதனால் மற்ற தமிழ் தினப் பத்திரிகைகள் மிகவும் நொந்து போயிருந்தன. இந்த நிலையைச் சீரமைக்கும் விதத்தில் தந்திக்கு இருந்த சிறப்புச் சலுகையை தி.மு.க. அரசு எடுத்துவிட இருக்கிறது. 'இது சரியான முடிவு தான். ஆனால் தந்தி பெற்று வந்த ஆதாயத்தை 'தினகரனு'க்குக் கொடுத்துவிடப் போகிறார்கள்' என்று கிண்டலடிக்கிறார்கள் மீடியாவினர்.

தேர்தலால் ஏற்பட்ட களைப்போ என்னவோ, வைகோ அமெரிக்கா செல்லவிருக்கிறாராம். அப்படியே அங்கே தமது மகன் புதிதாக ஆரம்பித்துள்ள ஃபாஸ்ட் புட் கடையையும் திறந்து வைக்க உள்ளாராம்.

- சஞ்சயன்

படங்கள் : ஸ்ரீஹரி

# உதவிக்கு வாங்க...!

அவரது வெள்ளைச் சட்டையில் செவ்வக வடிவிலான பேட்ஜ். 'உதவி தேவையா? அணுகவும். என்.பெரியசாமி, ஓய்வு பெற்ற ரயில்வே ஊழியர்' என்று அதில் அச்சிடப்பட்டிருக்கிறது. "வாங்க... உங்களுக்கு என்ன வேணும்?" திருச்சி தெப்பக்குளம் தபால் ஆபீஸ் உள்ளே நுழையும் ஒவ்வொருவரையும் பார்த்து, அவர் கேட்கும் கேள்வி இதுதான். எந்த கவுண்ட்டரில் தபால் தலைகள் வாங்குவது, மணியார்டர் அனுப்புவது எப்படி, பதிவுத் தபால் அனுப்புவது, டெலிபோன் பில் கட்டுவது, சேமிப்புக் கணக்கு எந்த கவுண்ட்டரில் துவக்குவது என்று பொது மக்கள் பயன்பாட்டுத் தேவைகள் அனைத்துக்கும் முகம் சுளிக்காமல் உதவி வழிகாட்டுவதுதான் அவரின் தினசரிப் பணி.

திருச்சி ஜங்ஷன், ரெயில்வே டிவிஷனல் ஆபீசில் ஹெட்கிளார்க்காகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர் பெரியசாமி. வயது எழுபத்தெட்டு. மனைவி சரோஜா, பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு இறந்துவிட்டிருக்கிறார். மூன்று மகன்கள். ஒரு மகள். அனைவருக்கும் திருமணம் ஆகிவிட்டது. திருச்சி, ஆண்டாள் வீதியில் சொந்த வீடு. ரெயில்வே பென்ஷன் வருவாய், வாழ்வுக்கு ஆதாரம். மனசுக்குத் தபால் ஆபீஸ் சேவை.

"ரிடையர்ட் ஆனதுக்கப்புறம் பென்ஷன் வாங்க மாசா மாசம் இங்கதான் வருவேன். பத்து கவுண்ட்டர்லயும் ஒரே கும்பலா இருக்கும். ஒரு சிலர் எந்த கவுண்ட்டர்னு தெரியாம ஒரு கவுண்ட்டர்ல அரை மணி நேரமா நின்னுட்டு, அவர் முறை வரும்போது அப்புறமா சரியான கவுண்ட்டர்ல திரும்பவும் போயி வரிசையில நிக்கும்படி ஆய்டும். போஸ்ட் ஆபீஸ் வர்ற பல பேருக்கு, முக்கியமான பல விவரங்கள் தெரியவே இல்லே. அவங்க எல்லோரும் படுற சிரமத்தைப் பார்த்துட்டுத்தான் நான் இப்படிச் செய்ய ஆரம்பிச்சேன்" என்று கூறும் பெரியசாமி, தினசரி காலை பத்து மணிக்கு தபால் நிலையத்துக்கு வந்தால் மாலை மூன்று மணிக்குத்தான் வீடு திரும்புகிறார்.

ரெயில்வேயில் அவருடன் வேலை பார்த்த பலரும், இங்கு வந்து பென்ஷன் வாங்கிச் செல்கின்றனர். அவர்களில் ஒரு சிலர் இவரைப் பார்த்து, "போய்யா... பொழைக்கத் தெரியாத ஆளா இருக்கே. டெய்லி இங்க பகல் பூரா கால் கடுக்க நின்னுட்டு, ஒத்த ரூபாய்க்குக்கூட வழியில்லாம, வர்றவங்க போறவங்க எல்லாருக்கும் கைடு பண்ணிக்கிட்டு இருக்கே. பேசாம தாலுகா ஆபீஸ் வாசல்ல போயி உக்காந்துக்கிட்டு மனு எழுதிக் கொடுத்தாக்கூடப் போதும். டெய்லி நூறு இருநூறு தேறும்!" என்று ஒரு மாதிரியாகப் பேசுவதுண்டாம். ஆனால் பெரியசாமி எதற்கும் மசிந்ததில்லை.

நம்மிடம் அவர் பேசிக் கொண்டிருக்கும்போது வயதான ஒரு பெண்மணி அவரை அணுகி 'ஐயா, இந்தப் பணத்தை எம்புள்ளைக்கு மணியார்டர் அனுப்பணும்' என்றார். அவ்வளவுதான்... பாதியிலேயே நம்மைக் கத்தரித்துவிட்டு ஓடுகிறார் பெரியசாமி. அவருக்கு வேலை வந்துவிட்டது.



* பெரியசாமி

- ஸ்ரீரங்கம் திருநாவு



ஆன்மிகத்தைப் பொறுத்தமட்டில் மனிதர்கள் அனைவருக்குமே குரு அவசியம். எல்லாக் கல்லிலும் சிற்பம் கல்லுக்குள்ளேயே மறைந்து இருக்கிறது. சிற்பி கல்லில் உள்ள வேண்டாத பகுதிகளைச் செதுக்கி நீக்கும் போது, அந்தக் கல்லிலிருந்து சிற்பம் வெளிப்படுகிறது. அதுபோலத்தான் ஒரு குரு, தன்னுடைய சிஷ்யனிடம் மறைந்துள்ள மெய்ப்பொருளை வெளிப்படுத்துகிறார். ஏதோ ஒரு மாய வலைக்குள் சிக்கி நாம் நமக்குள்ளே இருக்கும் மெய்ப்பொருளை மறந்திருக்கிறோம். அந்த மாயையிலிருந்து வெளிவராதவரை, மனிதனுக்கு குரு மிகவும் அவசியம். அவர்தான் நம்மை நமக்கு உணர்த்துவார்.

மாணவர்கள் தேர்வுக்காக இரவு பகலாகக் கண் விழித்துப் படிப்பார்கள். தேர்வு

# அன்பெனும் மழையிலே...

மையத்துக்குப் போய், கேள்வித்தாளை வாங்கிப் பார்த்தவுடன், படித்தது எல்லாம் மறந்துவிடும். நன்றாக மனப்பாடம் செய்திருந்த செய்யுள்கூட சட்டென்று நினைவுக்கு வராது. அப்போது, பக்கத்து மாணவன் அந்தச் செய்யுளின் முதல் அடியை எடுத்துச் சொன்னவுடன், மடமடவென்று முழுச் செய்யுளும் நினைவுக்கு வந்துவிடும். அது போலத்தான் நமக்குள்ளே ஆத்ம ஞானம் இருக்கிறது. உறக்க நிலையில் இருக்கும்

அதனை விழிப்புறச் செய்யும் சக்தி குருவின் வார்த்தைகளுக்கு உண்டு.

குருவின் அருகிலிருந்து அறிவு பெறுகிறபோது, சிஷ்யனிடம் இருக்கும் அறியாமை படிப்படியாக மறைந்து, மெய்ப்பொருள் மெல்ல மெல்ல தெளிவாகப் புலப்படுகிறது. மெழுகினால் மூடி வைக்கப் பட்ட சிற்பத்தை நெருப்பின் அருகில் கொண்டு சென்றால், மெழுகு உருகி உருகி, அதற்குள்ளே இருக்கும் சிற்பம் வெளியே வரும். அந்த நெருப்பினை ஒத்தவர்தான் குரு. அபூர்வமாக, ஓரிருவர் குரு இல்லாமல் மெய்ப்பொருளை உணர்ந்துள்ளார்கள் என்பதனால் 'யாருக்கும் குருவே வேண்டாம்' என்ற முடிவுக்கு வந்துவிடக் கூடாது.

உங்கள் உள்ளே விதை வடிவத்தில் இறைவனும், குருவும் இருக்கிறார்கள். ஆனால், தகுந்த காலநிலை இருந்தால்தான் அந்த விதை முளைத்து, வளர்ந்து பலனளிக்கும். எல்லாக் காலத்திலும் அந்த விதை முளைத்துவிடாது. அந்த விதை முளைப்பதற்கு ஏற்ற காலநிலையையும் சூழ்நிலையையும் உருவாக்கித் தருபவர்தான் குரு.

காஷ்மீரில் ஆப்பிள் நன்றாக விளையும். அங்கு நிலவும் தட்ப வெப்பநிலை ஆப்பிள் விளைவதற்கு ஏற்றதாக உள்ளது. ஆப்பிளை கேரளாவிலும் விளைய வைக்கலாம். ஆனால், எப்படித்தான் கருத்துடன் வளர்த்தாலும் பெரும்பாலான ஆப்பின் கன்றுகள் வளராமல் போகலாம். வளர்ந்த கன்றுகளும், காஷ்மீரைப்போல அதிக அளவில் பலன் தராமல் போகலாம். காரணம், ஆப்பிள் வளருவதற்கு ஏற்ற தட்ப வெப்ப நிலை கேரளாவில் இல்லாததுதான்.

குழந்தையாக இருக்கிறபோது, அதன் தாய் குழந்தைக்குப் பால் புகட்டி விடுகிறாள். குளிப்பாட்டி, ஆடை உடுத்தி விடுகிறாள். நாட்கள் செல்லச் செல்ல குழந்தை வளர்ந்து, தன் வேலைகளைத் தானே பார்த்துக் கொள்வதில்லையா... அதுபோல மனிதனுக்கு ஒரு காலகட்டம் வரை குருவின் உதவி அவசியம்.



# உருகி... உருகி...

## மாதா அமிர்தானந்தமயி 7

கிடைப்பதற்கு அரிய பொருள் ஒன்று ஒரு மனிதனுக்குத் தேவைப்பட்டது. பலரிடமும் விசாரித்தும், பல புத்தகங்களைப் படித்தும், கடைசியில் பல மைல் தொலைவிலுள்ள ஒரு ஊரில் அந்தப் பொருள் கிடைக்கும் என்று தெரிந்து கொண்டான். வரைபடங்களைப் பார்த்து அந்த ஊருக்கு எப்படிப் போவது என்று கண்டுபிடித்தான். அவனுக்கு அந்த அரிய பொருள் கிடைக்க வேண்டுமென்றால் மட்டும் போதுமா? அவன் அந்தப்

பொருள் கிடைக்கும் இடத்துக்குப் போக வேண்டுமல்லவா? சரி, பஸ் பிடித்து அங்கே போய்விட்டான். ஆனால், பஸ்ஸை விட்டு இறங்காமல் அதிலேயே உட்கார்ந்திருந்தால் அந்தப் பொருள் அவன் கைக்குக் கிட்டிவிடுமா? பஸ்ஸை விட்டு இறங்கி அந்தப் பொருள் கிடைக்கும் இடத்துக்குச் செல்ல வேண்டுமல்லவா?

சிலரது செயல்பாடுகள் இப்படித்தான் இருக்கும். ஆன்மிகத்தில் ஆர்வம் கொண்டு ஏதாவது ஒரு மார்க்கத்தைக் கடைப்பிடிப்பார்கள். ஆனால், இறுதி லட்சியத்தை அடைவதில் கவனம் செலுத்தாமல், செல்லும் மார்க்கத்திலேயே தங்களை மறந்துவிடுவார்கள். ஆசாபாசங்களை அதிக அளவில் வளர்த்துக் கொள்வதுதான் இதற்குக் காரணம்.

நாம் பெறும் அறிவு, நிலத்தைக் காப்பதற்குப் போடப்படும் வேலியைப் போன்றது. வேலி பாதுகாப்புக்குத்தானே தவிர, அதனால் மகசூல் கிடைக்காது. மகசூல் கிடைக்க வேண்டுமென்றால் நிலத்தில் பயிரிட வேண்டும். வாழ்க்கையில் அறிவு மட்டுமில்லாமல் தியானம், ஜபம் போன்றவையும் அவசியம். சாதாரண மனிதன் மின்சாரக் கம்பம் என்றால், ஆன்மிக அறிவுடன் தியானம், ஜபம் ஆகியவற்றில் தேர்ந்த மனிதர் ஒரு மின்சார நிலையம். தியானத்தின் மூலமாக அவ்வளவு சக்தியை நம்மால் பெறமுடியும்.

அறிவும் தியானமும் நாணயத்தின் இருபக்கங்கள் என்றால், அந்த நாணயத்தில் உள்ள முத்திரை சுயநலமற்ற சேவையாகும். அந்த முத்திரையால்தான் நாணயத்துக்கு மதிப்பு கிடைக்கிறது. முத்திரையில்லாவிட்டால் நாணயம் ஒரு செல்லாக்காசு. சுயநலம் கொண்ட மனிதனும்கூட இறைவனின் பார்வையில் செல்லாக்காசுதான்.

(அன்பு பெருகும்)



சுதாமணியைக் காணவரும் பக்தர்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வந்தனர். அதே நேரம், அவருக்கு எதிர்ப்பாளர்களும் தோன்றினார்கள். நாத்திகர்களான அவர்கள், தங்களை 'குருட்டு நம்பிக்கைகளை அகற்றும் குழு' என்று அழைத்துக் கொண்டனர். அக்கம்பக்கத்து கிராமங்களின் இளைஞர்களைத் தம்முடன் இணைத்துக்கொண்டு சுதாமணி பற்றி அவதூறு பிரசாரம் செய்தார்கள். பக்தி என்ற பேரில், சுதாமணியும் அவரது தந்தையும் அப்பாவிகளான பொதுமக்களை ஏமாற்றி வருகிறார்கள் என்று துண்டுப் பிரசுரங்கள் வினியோகம் செய்தனர். போலீஸுக்குப் புகார் கொடுத்தனர்.

போலீஸ் சுதாமணியை விசாரிக்க வந்தது. 'இந்த இடம் நான் விரும்புகிற மாதிரி அமைதியாக இல்லை. என்னைச் சிறையில் அடைத்து வையுங்கள். நான் அங்கே அமைதியாக தியானம் செய்கிறேன்; பூஜை செய்கிறேன்' என்று சொன்னார். அவரது கபடமற்ற பேச்சினையும், மன உறுதியையும் கண்ட போலீஸ் வெறுமனே திரும்பிச் சென்றனர்.

அதன்பின், உள்ளூர் போலீஸ் தங்கள் புகாரின்பேரில் நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை என்று மேலதிகாரிகளுக்கும் புகார் போனது. மேலதிகாரிகள் வந்து விசாரணை நடத்தினார்கள். அவர்களும் 'சுதாமணி மீது எந்த நடவடிக்கையும் எடுக்க முகாந்திரமில்லை' என்று கூறிவிட்டனர்.

அ-ம்-மா

- மௌலி

# வேதாளபுரி நூலகம்!




தன் முயற்சியில் சற்றும் தளராத விக்ரமாதித்யன் வேதாளத்தைத் தூக்கிக்கொண்டு நடக்க ஆரம்பித்தான். விக்ரமாதித்யனின் மௌனத்தைக் கலைக்க வேதாளம் பேச ஆரம்பித்தது.

''விக்ரமாதித்யா, கதை கேட்டு உனக்கு போரடிச்சுருக்கும். அதனால சில தகவல்களைச் சொல்லலாம்னு இருக்கேன். கவனமா கேள்.

சென்னைப் பட்டணத்துல ஏவி.எம்னு ஒரு பட நிறுவனம் இருக்குது. அதன் நிறுவனரோட மூத்த மகன்தான் ஏவி.எம். சரவணன். அவர் தன்னோட திரைப்பட தயாரிப்பு அனுபவங்களையும் பொது அனுபவங்களையும் கல்கி இதழில் தொடரா எழுதி வந்துட்டிருந்தாரு. இப்போ அதெல்லாம் தொகுக்கப்பட்டு ராஜராஜன் பதிப்பகத்தாரால் புத்தகமா வெளிவந்திருக்கு.

வெற்றி பெற்றவங்களோட அனுபவங்கள் எப்பவுமே சுவாரஸ்யமானது. அதுவும் திரைத் தொழிலில் வெற்றி பெற்றவருக்கு சொல்ல விஷயத்துக்கா பஞ்சம்? தன்னோட பால பருவத்திலருந்து இன்னிக்கு வரையுள்ள விஷயங்களை எளிமையா, சுவையா சொல்றதுல சரவணன் வெற்றி பெற்றிருக்காருன்னே வெச்சுக்கோயேன்! ஏவி.எம். நிறுவனத்துல தங்களோட படங்கள்ல பணியாற்றின இயக்குநர்கள், நடிக நடிகையர்கள், தொழில்நுட்பக் கலைஞர்கள், அத்தனை பேரோட புகைப் படங்களையும், குறிப்புகளையும் தொகுத்துத் தந்திருக்காங்க. இந்தப் பெருந்தன்மையைப் பாராட்டியே தீரணும். அதேபோல ஏவி.எம். நிறுவனத்தின் விழா நிகழ்ச்சிகள், திரைப்படங்களிலிருந்து சில காட்சிகளையும் தொகுத்து டி.வி.டியா கொடுத்திருக்காங்க.

விஷயம் இவ்ளோதான் விக்ரமா, ஆனா உன்னோட ஆழமான அறிவைச் சோதிக்கிற மாதிரி ஒரு கேள்வி கேட்கப் போறேன். ஏவி.எம். நிறுவனம் தயாரிச்சிட்டிருக்கிற படமான சிவாஜியோட நாயகன் யாரு? என் கேள்விக்கு விடை தெரிஞ்சும் சொல்லலைன்னா, உன் தலை என்ன கதி ஆகும்னு உனக்கே தெரியும்'' என்று வேதாளம் எச்சரித்தது.



வேதாளத்தின் விஷமத்தால் சீண்டப்பட்ட விக்ரமாதித்யன், ''உனக்கே விடை தெரியும் போது, எனக்குத் தெரியாமல் போகுமா? கதாநாயகனா ரஜினிகாந்தும் நாயகியா ஷ்ரேயாவும் நடிக்கிறாங்க'' என்றான்.

''சரியான அதிகப் பிரசங்கியா இருப்பே போலிருக்கே. நான் கேட்டதுக்கு மட்டும் பதில் சொல்லாம அதிகம் பேசினதுனால முருங்கை மரத்துக்கே போறேன். சீக்கிரம் வந்து சேர்'' என்றபடி நழுவியோடியது வேதாளம்.

**- ராஜராஜன் பதிப்பகம்,**
**19, கண்ணதாசன் சாலை,**
**சென்னை - 17**

# இறந்தபின் பிறக்கலாம்!

## சுஜாதா

சோலார் செல்களின் ஆற்றலை அதிகரிப்பது ஒரு முக்கியமான பயன்பாடு. இதன் பின்னணியில் முன்னேறும் நாடுகள், முன்னேற்ற நாடுகளை எட்டிப் பிடிக்கும் சாத்தியம் உள்ளதை நீங்கள் அறியவேண்டும். சுற்றுச்சூழலைப் பாதிக்காமல் கழிவுப் பொருள்களை அதிகரிக்காமல் உலகத் தரத்துக்கு உற்பத்தி செய்யும் சாத்தியத்தை நானோ டெக்னாலஜி ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. எதிர்காலத்தில் அதி இலேசான மிக்க வலிமையுள்ள கச்சாப் பொருள்கள் தயாரிக்க முடியும். விண்வெளிப் பயணத்தில் விண்கலத்தின் கனம் குறையும். அதைச் செலுத்துவதற்கான எரிபொருள் குறையும். நாம் சூரிய மண்டலத்தின் விளிம்புகளை எட்டிப் பிடித்து, அதைவிட்டு விலகிச் செல்லவும் முடியலாம். அதிக நாள் பயணத்துக்கு நானோ டெக் கண்டுபிடிக்கும் அதி இலேசான கலங்கள் உதவும்.



நானோ டெக்னாலஜியின் மிகப் பெரிய சாதனையாக விஞ்ஞானிகள் எதிர்பார்ப்பது மனித சரீரத்தினுள்ளே 'மாலிக்யூலர் ரிப்பேர்' செய்யும் திறமைகளைத்தான். மருத்துவ 'நானோபாட்'கள் நம் உடலுக்குள் சென்று செல்களை ரிப்பேர் செய்ய முடியும். கேன்சர் செல்களை அழிக்க முடியும். சேதப்பட்ட பாகங்களைப் பழுதுபார்க்க முடியும். மூளையின் கச்சடாக்களை அகற்ற முடியும். விளைவு... காயகல்பம் சாப்பிட்டதுபோல சதா இளமையாக இருக்கும் உடல்.

மனிதன் எதற்குச் சாக வேண்டும்? நூறு வருஷம் என்று வாழ்நாளைத் தீர்மானித்தது யார்? யோசித்துப் பார்த்தால் உடல் உறுப்புகள் மெல்ல மெல்ல செயலழிவதால்தான் நாம் சாகிறோம். முதல் பல் விழும்போது; முடி உதிரும்போது; தீவிரமான பாதிப்பால் மருத்துவமனைக்கு விஜயம் செய்யும்போது தவணை முறையில் மெல்லச் சாகிறோம். இறுதியில் அத்தனையும் தளர்ந்து சுழன்று ஏதாவது ஒரு உறுப்பு கைவிட்டுவிடுகிறது. ஒரு நாள் மார்பில் சளி சேர்ந்து கொண்டோ, இதயம் களைத்துப் போயோ, மூச்சு நின்றுபோய், ஆழ்வார் சொன்னதுபோல் 'ஏடு நிலத்தில் விழுவதன்முன்' வாழ்நாளின் பல கட்டங்களில் நிகழும் சேதங்கள் அனைத்தையும் அவ்வப்போது ரிப்பேர் செய்துவிட்டால் நூறு வயது என்ன, எதையும் தாண்டி வாழ்வதற்கு இயற்கை தடை விதிக்காது. இதை எதிர்பார்த்து இப்போது கூட மெடிக்கலாக இறந்துபோனாலும் க்ரையோஜெனிக் முறைகளைப் பயன்படுத்தி உடலைக் குளிர்வித்து, அடுத்த நூற்றாண்டுவரை வைத்திருந்து விஞ்ஞான முன்னேற்றம் ஏற்பட்டதும் அப்போதைய

கிறார். நானோ டெக்னாலஜி மூலம் இது சாத்தியமாகும் போலத் தெரிகிறது. நானோ டெக்குடன் - (விட்ரிஃபிக்ஷன்) திரவங்கள் கட்டி தட்டாமல் தடுக்கும் தொழில் திறமையும் சேர்ந்தால், உடல் உறைய வைக்கப்பட்டு காத்திருப்பவர்களை உயிர்ப்பிக்க முடியும் என்று சொல்கிறார்கள். அதற்கான வேளை வர இன்னும் ஒரு முப்பதாண்டுகள் ஆகலாம். அதன்பின் இறந்தவர்கள் மீண்டும் பிறக்கலாம். இதெல்லாம் கொஞ்சம் புனைகதைத் தன்மை கொண்டதாக உங்களுக்குத் தெரியலாம். உண்மை நிலை என்ன என்பதையும் சொல்லி விடுகிறேன்.

இன்றைய முன்னேற்ற நிலையில் மாலிக்யூலர் ரிப்பேர் என்பதற்கான கருவிகளையும் நாம் முந்தைய



சாகஸம் இடியிறம்-11

முறைகளைப் பயன்படுத்தி புத்துயிர் பெற விரும்பி அதற்கான செலவை தங்கள் சொத்தில் ஒதுக்கி வைத்துச் செத்திருக்கிறார்கள் சிலர்.

ஹக்ஸ்லி, After Many A summer Dies the swan என்ற நாவலில் மனிதனின் மரணத்தை வெல்லும் இச்சையைச் சொல்



# வாரியார் அமுதம்!

இறைவன் ஒருவன்தான் குற்றம் இல்லாத குணக்குன்று. மனிதப் பிறவி எடுத்த நாம் அனைவரும் ஏதாவது ஒரு சிறிதாவது குற்றம் உடையவர்கள்தாம். செம்பு கலவாத அணி கலனே கிடையாது. அதுபோல் குற்றம் இல்லாத மனிதன் இருக்க முடியாது.

குற்றம் புரிந்தவர்கள் ஆண்டவனிடத்திலும், ஆன்றோர்களிடத்திலும் குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். ஒப்புக்கொண்டால் நம் குற்றங்களை இறைவன் மன்னிப்பான்.

"புரி பிழை பொறுக்கும் சாமி" என்கிறார் அருணகிரிநாதர்.

அத்தியாயத்தில் சொன்னதுபோல் அணு அணுவாக ஜோடித்துக் கட்டுவதையும் தன்னைத்தானே இரட்டித்துக் கொள்வதிலும் முக்கிய கவனம் செலுத்தி வருகிறார்கள். இதன் உடனடி கவனம் சில வலுவான அதி இலேசான பொருள்களைத் தயாரிப்பதிலும் ஆற்றல் அதிகமுள்ள அதிக விரயமில்லாமல் சில்லுகளைத் தயாரிப்பதிலும்தான். எனவே நானோ டெக்னாலஜி மூலம் நீங்கள் மறுபிறவி எடுக்க உத்தேசம் இருந்தால் காத்திருக்க வேண்டும்; நிறைய பணம் வேண்டும்.

எப்படியும் இன்றைய தின மேதைகளைத் தேர்ந்தெடுத்து அவர்கள் இறந்து போனால் புதைக்காமல், எரிக்காமல் பாதுகாத்து தாமதித்து மறுபடி உலகுக்கு அளிக்க முடியும்போது, பிரச்னை யாரைத் தேர்ந்தெடுப்பது என்பதில்தான் போட்டி வரும்.

நானோ டெக்னாலஜியைக் கடுமையாக விமர்சிப்பவர்களும் இருக்கிறார்கள். வாழ்க்கைத் தரத்தை உயர்த்தாமல் வாழ்நாளை மட்டும் நீட்டிப்பது அபாயகரமானது என்று சிலர் கருதுகிறார்கள். இதற்கு எதிர்வாதமாக வாழ்நாளை நீட்டிப்பது மனித குலத்துக்குப் பயன்படும் என்கிறார்கள். காரணம் அவர்களின் அனுபவ முதிர்ச்சி. மற்றொரு விமர்சனம் நானோ டெக்னாலஜி அயோக்கியர்களிடம் சிக்கிவிட்டால் அபாயம் என்கிறார்கள். மைக்கேல் க்ரிக்டன் இதைத் தமது Prey என்ற நாவலில் சுவாரஸ்யமாகச் சொல்லியிருக்கிறார். குட்டிக் குட்டி மாலிக்யூலர் ரோபாட்டுகள் சேர்ந்து கொண்டு மேக ரூபத்தில் மனித குலத்தை ஆக்ரமிக்க, அழிக்க முற்படுவதாகக் கற்பனை செய்திருக்கிறார். நாவல் கற்பனைதான் என்றாலும் க்ரிக்டன் நானோ டெக் பற்றி நிறைய படித்திருப்பது தெரிகிறது. குறிப்பாக டெக்ஸ்லர், ஃபேய்ன்மன் இருவரையும் கரைத்துக் குடித்திருப்பது தெரிகிறது. க்ரிக்டன் சொன்னது போன்ற அபாயம் சற்று மிகையானதுதான். இருந்தும் எந்தப் புதிய டெக்னாலஜியிலும் துவக்கத்தில், பொதிந்துள்ள அபாயத்தைக் கணிப்பது கஷ்டமே. நெருப்பு சுடும் என்று அதைத் தடை செய்ய முடியாது. மனித இனத்தின் பெரும்பான்மை நல்ல குணத்தின் மேல் நம்பிக்கை கொண்டு நானோவை துஷ்பிரயோகம் செய்ய மாட்டோம் என்ற நம்பிக்கைதான் பயோ டெக்னாலஜி. நானோடெக்னாலஜியை எந்த எந்த எதிர்கால டெக்னாலஜியிலும் அறிமுகப்படுத்தும்போது தவறாமல் ஒரு கம்சனோ, ராவணனோ அதை வரம் கேட்டுப் பெறும்போது ஒரு கிருஷ்ணனும் ராமனும் தோன்றுவார்கள் என்ற நம்பிக்கைதான்.

(விந்தை தொடரும்)

படம் : ஸ்ரீஹரி

# அருள்வாக்கு



ஸூர்யோதயத்துக்கு முந்தைய மூன்றேமுக்கால் நாழிகை (ஒரு நாழிகை என்பது 24 மினிட்)க்குப் பிராதக் காலம் என்று பேர். அருணோதயம் என்றும் சொல்லுவதுண்டு. அந்தக் காலத்தில் பச்சை ஜலத்தில் குளிப்பதற்கு பிராதஸ்நானம் என்று பெயர். ஆற்றில், குளத்தில் செய்தாலும் சரி, அகத்தில் மொண்டு விட்டுக்கொண்டு செய்தாலும் சரி, தலைக்கும் ஜலம் விட்டுக்கொள்ள வேண்டும் (தலைக்கு தினமும் ஜலம் விட்டுக்கொள்வது ஸ்திரீகளுக்கு அவசியமில்லை. விரததினம், பித்ருதினம் தவிர மற்ற நாட்களில் அவர்கள் தலைக்கு மஞ்சள் ஜலம் புரோக்ஷித்துக்கொண்டாலே போதும்) பொதுவாகத் தலையோடு கால் பச்சை ஜலத்தில் காலங்கார்த்தாலேயே

# ஸ்நானம்...

குளித்துவிட வேண்டும். இதன் த்ருஷ்ட பலன், அதாவது பிரத்யக்ஷ விளைவு, முதலாவதாக தேஹ சுத்தி. உடம்பின் அழுக்கு போகிறதென்று நேரே தெரிகிறது. அதோடு அந்த வேளையில் குளித்து விடுவதால் தூங்குமூஞ்சித்தனம், சோம்பல் எல்லாம் போய், உத்ஸாஹமும் சுறுசுறுப்பும் உண்டாகின்றன. புத்தித் தெளிவும் ஏற்படுகிறது. இன்னும் மெடிகல் ஸயன்ஸ்படி சொல்லும்போது, இந்தப் பிராத ஸ்நானத்தினால் நரம்பு மண்டலமே உறுதியடைந்து, இப்போது 'நெர்வஸ் டிஸீஸ்' என்று பல ரூபத்தில் பரவி வருவதெல்லாம் க்ஷீணித்து விடும் என்கிறார்கள். அந்த வேளையில் ஸ்நானம் செய்வது உணர்ச்சிகளையும் குளிரப் பண்ணி சமனமாக்குகிறதென்பது இதன் ஸைகலாஜிகல் எஃபெக்ட்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

‘‘பாய்ஸ்’ படத்துல ஐஞ்சு பேர்ல நானும் ஒருத்தன். அங்கங்கே காண்பிச்ச வித்தியாசமான நடன அசைவுகள் தவிர எனக்குன்னு சொல்லிக்கிற மாதிரி ஒரு காட்சியும் இருக்காது. அந்தப் படத்துல என்னை டார்ச்லைட் அடிச்சுத்தான் தேடணும். படம் ரிலீஸான பிறகு கூட சித்தார்த், மணிகண்டன் ரெண்டு பேருக்குத்தான் எதிர்காலம்னு எல்லோரும் கணிச்சாங்க’’ என்று சிரித்துக்கொண்டே தலையை ஒரு முறை கோதிவிட்டு மேலே பார்க்கிறார் பரத். எவ்வித தனித்துவமுமின்றி சினிமாவில் நுழைந்த பரத், இன்றைக்குத் தமிழ் சினிமாவின் வருங்காலத் தூண்களில் ஒருவர். ஷங்கர் தயாரிப்பில் உருவாகும் ‘வெயில்’, விக்ரமனின் இளமைப் படமான ‘சென்னைக் காதல்’, ‘மெட்டி ஒலி’ திருமுருகனின் முதல் படமான ‘எம்டன் மகன்’ மற்றும் ‘கூடல் நகர்’ என லட்டு லட்டாக மெகா படங்களைத் தம் வசம் வைத்திருக்கிறார் பரத். இதோ அவரது கதையை விட்ட இடத்திலிருந்து தொடர்கிறார்...

‘‘அதுக்கப்புறம் எந்த லட்சியமும் இல்லாம எப்படியாவது தமிழ் சினிமாவோட ஒரு கிளையைப் பிடிச்சுத் தொங்கிக்கிட்டு இருந்தாலே போதும்னுதான் இருந்தேன். அடுத்தது ‘4 தி பியூப்பிள்’ங்கிற மலையாளப் படத்துல நடிக்க வாய்ப்புக் கிடைச்சுது. விதி, அதுலயும் நாலு பேர்ல ஒருத்தனாத்தான் நடிச்சிருந்தேன். அப்படியும் ‘லஜ்ஜாவதி’ பாட்டு எல்லோரையும் என் பக்கம் திருப்பியது. மலையாளத்துல ‘அ’ன்னா ‘ஆ’வன்னா தெரியாததால என்னால அதனோட வெற்றியை முன்பே கணிக்க முடியலை. அந்தப் பாட்டு தமிழ்லயும் அதகளம் பண்ணினது சத்தியமா இன்ப அதிர்ச்சி.

‘செல்லமே’வுலயும் நான் ஹீரோ கிடையாது. ஆனா கதை என்மீதுதான் பயணிக்கும். நல்ல பேர் கிடைச்சுது. நான் நினைச்சபடியே தமிழ் சினிமாவுல ஒரு அங்கமா இருக்கோமேன்னு திருப்திபட்டுக்கிட்டேன். அப்போதான் மறுபடியும் ஷங்கர் அழைச்சாரு. ‘காதல்’ ஷூட்டிங், ஆரம்பிச்ச வேகத்துல ‘சல்’லுன்னு முடிஞ்சுது.






• ‘அழகாய் இருக்கிறாய் பயமாய் இருக்கிறது...!’ படத்தில் பரத், மல்லிகா கபூர்



# "காதல் படம் எனக்கு மைனஸ்!"

'காதல்' தமிழ்ல வெளிவந்த சிறந்த படங்கள்ல ஒண்ணுன்னு சொல்றாங்க. அதோட வெற்றி, பாராட்டு அனுபவம் இன்னைக்கும் இம்மியளவும் என்னைவிட்டு விலகலை. விலகவும் கூடாது. ஆனா அதே 'காதல்' எனக்கு மைனஸாவும் இருந்திருக்கு. 'பிப்ரவரி 14' தோல்விக்குக் காரணம் 'காதல்'தான். அதுல அழுக்குப் பையனா மதுரைத் தமிழ்ல பொளந்து கட்டின முருகனா என்னைப் பார்த்த ரசிகர்களுக்கு, அடுத்த படத்துலேயே காலேஜ் ஸ்டுடண்டா துள்ளத் துடிக்க ரேணுகாமேனனை லவ் பண்ணினது பிடிக்கலை. அதனால இனிவரும் படங்கள்ல காதலை மையப்புள்ளியா வைச்சு அதுல வேறென்ன வித்தியாசங்கள் செய்ய முடியும்னு பார்க்கிறேன்.

'பட்டியலு'க்குப் பிறகு இனி ரெண்டு ஹீரோ படங்கள்ல நடிக்கறதில்லைன்னு முடிவெடுத்திருக்கேன். ஆர்யாவோட எந்தப் பிரச்னையும் இல்லை. ஆனா ரெண்டு ஹீரோ படங்கள்ல நடிச்சா நிறைய கேள்விகள் கிளம்புது. அதான் இப்படியொரு முடிவு. 'அழகாய் இருக்கிறாய்...' தமிழ் சினிமாவுல புது ட்ரெண்ட் செட்டரா இருக்கும், பெருசா போகும்னு எதிர்பார்த்தோம். ஆனா முடிவுகள் ஏமாற்றம்தான்.

அடுத்தடுத்து கதைச் சத்துள்ள படங்களா நடிச்சுட்டு வர்றேன். குறிப்பா 'எம்டன் மகன்'ல நாசர் சாருக்குச் சமமா நடிக்க வாய்ப்புக் கிடைச்சது என் பாக்கியம். ஒவ்வொரு குடும்பத்துலேயும் நடக்குற கதை அது. படத்தை சிலை மாதிரி வடிச்சுட்டு வர்றாரு திருமுருகன்.

இளம் ஹீரோன்னா பெண் ரசிகைகள் மொய்ப்பது வழக்கம். எனக்கு மேடி, சூர்யா லெவலுக்கெல்லாம் கிடையாது. ஆனாலென்ன, என்னோட சினிமா இன்னிங்ஸ்ல இனிமேல்தாங்க விறுவிறுப்பு சேரப் போகுது. ரெடியா இருங்க..."

- சநகன்

# ஒரே நியதி!

அமரர் கல்கி

**வி**யாபார உலகத்தில், கறார் விலை இல்லாமல், பேர முறை இருப்பதினால் எவ்வளவு அருமையான காலத்தை ஒவ்வொருவரும் வீணாக்க வேண்டியிருக்கிறது என்பதைக் கணக்கிட்டுப் பார்த்தோமானால் நமது கதி கலங்கிப்போகும் என்பதில் சந்தேகமில்லை.

பேர முறையில் உள்ள பெரிய குறைபாடு என்னவென்றால், சாமான் வாங்குபவனுக்கு எப்போதும் மன அமைதி ஏற்படுவதேயில்லை. ஒரு ரூபாய் விலை சொன்ன ஒரு சாமானை எட்டணாவுக்கு ஒருவன் வாங்கிவிட்டதாக வைத்துக் கொள்வோம். அப்போதும் அவனுடைய மனதில் 'ஒரு வேளை இன்னும் சிறிது பேரம் செய்திருந்தால் ஏழணாவுக்குக் கிடைத்திருக்குமோ?'' என்ற எண்ணம் உறுத்திக் கொண்டேயிருக்கிறது.

இரண்டணா விலை குறைத்து ஒரு சாமானை வாங்கும் பொருட்டு ஒரு பிற்பகல் முழுதும் செலவிட்டிருக்கும் சில நண்பர்களை எனக்குத் தெரியும். அவர்கள் இரண்டணாவைப் பொருட்படுத்துகிறவர்களல்ல; ஆனால் அசட்டுப்பட்டம் கூடாது என்பதில்தான் அவர்களுக்குக் கவலை. 'நாம் ஏமாற்றப்பட்டோம்' என்ற உணர்ச்சி யாருக்கும் மிகவும் துன்பமளிக்கக் கூடியதல்லவா?

'ஒரு ரூபாய்க்கு வாங்கக்கூடிய சாமானுக்கு ஒரு ரூபாய் இரண்டணா ஏமாந்து கொடுத்துவிட்டோம்' என்ற எண்ணம் எவரையும் இராத் தூக்கம் இல்லாமல் அடித்து விடக் கூடியதாகும். கடைகளில் பேர முறை உள்ளவரையில், அநேகர் இராத்தூக்கம் இல்லாமல் அவஸ்தைப்பட வேண்டியதுதான்.



ஒரு சமயம் என்னுடைய சிற்றன்னையுடன் வெண்கலக் கடைக்குச் சென்றிருந்தேன். ஒரு வெண்கலப் பானை வாங்குவதற்காக மத்தியானம் ஒரு மணியிலிருந்து நாலரைமணி வரையில் நாலைந்து கடைகளில் புகுந்து விலை பேசினாள். கடைசியாக, முதலில் ஆறரை ரூபாய் விலை சொன்ன வெண்கலப் பானையை மூன்றேகால் ரூபாய்க்கு வாங்கிக்கொண்டு வந்து சேர்ந்தாள். அதில் அவளுக்கிருந்த கர்வமும், சந்தோஷமும் சொல்லத்தரமல்ல. ''நீயாயிருந்தால் சொன்ன விலை கொடுத்து ஆறரை ரூபாய்க்கு வாங்கிக்கொண்டு வந்து நிற்பாய்'' என்று என்னை ஏசிக்கொண்டே வந்தாள். ஆனால், வீட்டுக்கு வந்ததும், அடுத்த வீட்டு அம்மாள் ''ஐயோ! நேற்றுதானே எங்கள் அத்தை இதே மாதிரி வெண்கலப் பானை மூன்றே அரைக்கால் ரூபாய்க்கு வாங்கிக்கொண்டு வந்தாள்?'' என்று சொல்லி, அந்த வெண்கலப் பானையையும் கொண்டு வந்து காட்டியதும், சிற்றன்னையின் முகத்தில் ஈயாடாமல் போய்விட்டது.

**ந**மது வியாபார உலகத்தில் முதலில் செய்யப்பட வேண்டிய இன்றியமையாத சீர்திருத்தம், 'பேரம்' என்பதை ஒழித்து 'கறார் விலை' முறையை ஏற்படுத்துவதாகும். இதனால் கடைக்காரர்களுக்கு எவ்வளவோ சௌகரியமுண்டு. ஐந்து சிப்பந்திகள் ஒரு கடையில் இருந்தால், கறார் விலை ஏற்படுத்தியதும் இரண்டு பேரைக் குறைத்து விடலாம்; அல்லது அவர்களுக்கும் வேலை ஏற்படுமாறு வியா

பாரத்தைப் பெருக்கலாம்.

பேர முறையின்போது சாமான் வாங்க வரும் ஒருவர் கடையில் ஒரு மணி நேரம் செலவழிக்கிறார் என்றால், கறார் விலை முறையில் அவர் ஐந்து நிமிஷத்துக்கு மேல் இருக்கமாட்டார். மற்றவர்களுக்கு இடங் கொடுத்துவிட்டுப் போவார். கடைச் சிப் பந்திகளும் கடைக்கு வருகிற வர்கள் எல்லாரையும் நன் றாய்க் கவனித்துக் கொள்ள லாம்.

ஆரம்பத்தில் இதில் சிறிது சிரமம் இருக்குமென்பதை நானறிவேன். பேர முறை அவ்வளவு பழகிவிட்டபடியால், 'கறார் விலை' என்பதை சிலர் இலேசில் நம்ப மாட்டார்கள்; ஒப்புக்கொள்ளவும் மாட்டார்கள். அரைச் செவிடர் சாமான் வாங்கிய கதை தெரியு மல்லவா?

"பெட்டி என்ன விலை?" என்று அரைச் செவிடர் கேட்டார்.

"மூன்றரை ரூபாய்" என்றான் கடைக்காரன்.

"ஐந்தரை ரூபாயா? ரொம்ப அதிகம். நாலு ரூபாய்க்குத் தருகிறாயா?"

"இல்லை, இல்லை. விலை மூன்றரை ரூபாய்?"

"ஓஹோ! அப்படியானால் இரண் டரை ரூபாய்க்குக் கொடு!"

இதைப்போல், கடைக்காரன் சொல்லு கிற விலைக்குக் குறைத்துக் கேட்க வேண்டுமென்பது சாமான் வாங்குவதில் நம்முடைய ஒரே நியதியாய் இருந்து வந் திருக்கிறது. அதை மறந்து, சொன்ன விலை கொடுத்து வாங்குவதென்றால், சிறிது சிரமந்தான்.



- 'கல்கி களஞ்சியம்' நூலிலிருந்து...
வானதி பதிப்பகம்



# செண்பகம்

நான்கு வாரத் தொடர்

"அம்மா!... அம்ம்மா!" - நித்யா நின்ற இடத்திலிருந்து கத்திக் கொண்டிருந்தாள்.

"இப்படிக் கத்தாதே... இருக்கற இடத்துக்கு வந்து கூப்பிடுன்னு எவ்வளவு முறை சொல்லியிருக்கேன்!" கைகளைத் துடைத்தபடி முன்னறைக்கு வந்தாள் நளினி.

"ரமேஷ் மாமா வந்திருக்காங்க பாரு... இப்போ நான் மாலதி வீட்டுக்குப் போகணும்... கம்பைன்ட் ஸ்டடீஸ். ப்ளீஸ் அம்பது ரூபா குடு... லேட்டானா ஆட்டோ புடிச்சு வந்துடுவேன்."

"முதல்ல மாமாவை உட்காரச் சொன்னியா... ஏதாவது சாப்பிடறாரான்னு கேட்டியா...? தண்ணி கொண்டு வந்து கொடு."

"ரமேஷ் மாமா நம்ம ஃபேமிலில ஒருத்தர்னு நான் நினைச்சுக்கிட்டிருக்கேன். நீ அவரை விருந்தாளியா ஆக்கணும்னு பார்க்கறியே...!" கேட்டபடியே ஓடிப் போய் ஃப்ரிட்ஜிலிருந்து தண்ணீரை பாட்டிலோடு கொண்டு வந்து வைத்தாள் நித்யா.

"டம்ளர் கொண்டு வாம்மா!"

மீண்டும் சமையலறைக்கு ஓடி டம்ளரை எடுத்து வந்து நீட்டியவள் "நாங்களெல்லாம் பாட்டிலோடத்தான் குடிப்போம்பா!" என்றாள். "அம்மா! ஃபிஃப்டி ருபீஸ்."

"மாடியில என் பர்ஸ்ல இருக்கு, போய் எடுத்துக்கோ... ஆனா ஒரு கண்டிஷன். நீ ஆட்டோல வரக் கூடாது!"

"பின்னே நீ குடுக்கற அம்பது ரூபாய்க்கு ஹெலிகாப்டர்லயா வர முடியும்!"

அதுவரை மௌனமாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ரமேஷ் அடக்க முடியாமல் சிரித்து விட்டான்.

"சிரிக்காதீங்க ரமேஷ்! விட்டா இந்தப் பொண்ணு ஊரையே முறிச்சு வாயில போட்டுக்குவா!"

"சரி! சிரிக்கலை, நித்யா! அம்மா என்ன சொல்றாங்கன்னா இருட்டின பிறகு ஆட்டோல வர வேண்டாம்ங்கறாங்க. நீ உன் ஃபிரண்ட் வீட்டிலேருந்து கிளம்பத் தயாரானதும் ஃபோன் பண்ணு, அப்பாவோ சத்யாவோ அதுக்குள்ள வந்துட்டா அவங்க வருவாங்க, இல்லைன்னா நான் வந்து உன்னை அழைச்சுட்டு வரேன்..."

"கிடையாது. அப்பா, சத்யா வேண்டாம். நீங்கதான் வரணும்



சீதா ரவி

என்னை அழைச்சுக்க... மாலதி வீடு தெரியுமில்லே உங்களுக்கு...? அம்மாவுக்குத் தெரியும் சொல்லுவாங்க... நான் வரேன்..."

"அம்பது ரூபா கேட்டியே நித்யா?" நளினி ஞாபகப்படுத்தினாள்.

"வேண்டாம் அதான் மாமா வராரே."

"கையில காசில்லாம வெளியில போகாதே."

"இப்போ திருப்பியும் மாடிக்குப் போகச் சொல்றியே!"

சட்டென்று தனது பர்ஸிலிருந்து ஐம்பது ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுத்து அவளை அனுப்பி வைத்தான் ரமேஷ்.

"சரியான வாயாடி. இந்தப் பொண்ணு... திருத்தவே முடியாதுப்பா இவளை!"- சோஃபாவில் அமர்ந்து கால்களைத் தூக்கி மடக்கி வைத்துக் கொண்டாள் நளினி.

"நல்லதுதானே நளினி. இவளும் சத்யா மாதிரியே ஆழமா, மௌனமா இருந்தா அப்புறம் என்ன சுவாரஸ்யம் இருக்கு...?"

சத்யாவின் பெயரை அவன் சொன்னதுமே அந்த அறையெங்கும் செண்பக மலர் வாசம் கமழ்வதான ஒரு பிரமை உண்டாயிற்று அவளுக்கு.

"என்ன ஆச்சு?" என்றான் அவள் முக பாவம் மாறுவதைப் பார்த்து.

"சத்யாகிட்டே வேற மாதிரி சுவாரஸ்யம் இருக்கேன்னு நினைச்சுக்கிட்டிருந்தேன்."

"நிச்சயமா.. ஒவ்வொரு குழந்தையும் ஒவ்வொரு விதமான அழகு, சுவாரஸ்யம்..."

"அவன் இனிமே குழந்தை இல்லை..."

"எனக்குக் குழந்தையாத்தான் தெரியறான்" என்றான் ரமேஷ்.

'அவன் சட்டைப் பையில் செண்பகப்பூவை வைத்துக்கொண்டு அலைகிறான் தெரியுமா? அது குறித்து ஏதேனும் கேட்கும் உத்தேசத்துடன் அணுகினால் அவன் உள்ளுணர்வுக்கு எப்படியோ தெரிந்து போகிறது. தன்னைச் சுற்றி ஒரு எஃகுக் கோட்டை எழுப்பிக் கொள்கிறான். அது மாதிரி சமயங்களில் அவனை நெருங்கவே அச்சமாயிருக்கிறது. மேலும்... ஒரு சந்தேகத்தின் அடிப்படையில் அவனிடம் நான் என்ன பேசுவது? எதைக் கேட்பது. அது எப்படி நியாயமாகும்? என் சந்தேகம் தவறாயிருந்தால் அவன் நொறுங்கிப் போய்விட மாட்டானா?..'

ரமேஷ் இருப்ப



தையும் மறந்து சற்று தனக்குள் ஆழ்ந்தாள் நளினி.

"என்னம்மா! ஏதாவது கவிதை உதயமாகப் போகுதா...?" என்று அவன் கேட்ட போது சிரித்தபடி சொன்னாள்:

"சத்யா குழந்தையாத் தெரியறான்னா நித்யா இன்னும் பிறக்கவே இல்லைன்னு சொல்லிடப் போறீங்க! உங்களை மாதிரி 'ஹாய்'யா இருந்தா எல்லா குட்டிப் பிசாசுகளும் தேவதைகளாகத்தான் தெரியும். கல்யாணம் பண்ணிக்கிட்டு இரண்டு பிள்ளைங்களைப் பெத்து வளர்த்திருந்தா கதையே வேற!"

"அந்தக் 'கதை'யெல்லாம் வேண்டாம்னுதானே கல்யாணமே பண்ணிக்கலை..."

"ஜோக்கெல்லாம் கிடக்கு விடுங்க ரமேஷ்... நீங்க ஏன் கல்யாணம் வேண்டாம்னு இருக்கீங்க...? எங்கிட்டே சொல்லலாமில்லையா?"

"ஏன்? தெரிஞ்சுக்கிட்டு என்ன பண்ணுவீங்க...? கல்யாணம் பண்ணிக்கணும் அதுதான் நல்லது. பாதுகாப்பு, அப்புறம் பின்னால வருத்தமாயிருக்கும், தனிமையாயிருக்கும்னு அட்வைஸ் பண்ணப் போறீங்களா...?"

"இல்லை... இல்லை... இல்லவே இல்லை... இவர்கிட்டே பல முறை கேட்டுப் பார்த்தேன். நீங்க ஏன் செட்டில் ஆகாம இருக்கீங்கன்னு... 'அதெல்லாம் அவங்கவங்க தனிப்பட்ட விஷயம்; நாம கேட்டா ஒரு வேளை ரமேஷுக்கு வருத்தமாயிருந்தாலும் இருக்கும். சும்மா இரு'ன்னு ஒவ்வொரு தடவையும் என்னை அடக்கிடுவார்... ஆனா தெரிஞ்சுக்கறது என் கடமைன்னு நினைக்கிறேன். உங்களைப் பத்தி முழுசா தெரிஞ்சுக்கிட்டா இன்னும் நல்ல ஃப்ரெண்டா இருக்கலாமில்லியா...?"

சட்டென்று அவன் முகம் இளகியது. அவன் எழுந்து விளக்கை ஆன் செய்து விட்டு வந்து மீண்டும் அமர்ந்தபோது அவன் விழிகள் பளபளத்துக் கசிந்தன.

"சொல்ல இஷ்டம் இல்லைன்னா சொல்ல வேண்டாம்..."

"இல்லை நளினி. சொல்றேன். ரொம்ப பேர் கேட்கிற கேள்விதான். ஆனா என் பதில் யாருக்கும் புரிஞ்சதில்லே... அப்பா அம்மாவுக்குக் கூட புரியலை. அதனால் பதில் சொல்றதையே நிறுத்திட்டேன். உங்களுக்குப் புரியும்னு தோணுது. புரியலைன்னாலும் பரவாயில்லைன்னு மனசுல ஒரு சந்தோஷமான தைரியம் இருக்கு... அதனால சொல்றேன்..."

சற்று நேரம் மௌனமாக இருந்தான். நளினி பொறுமையாக அவன் முகம் பார்த்தபடி இருந்தாள். மெல்ல ஆரம்பித்தான்.

"கல்யாணம்ங்கறது ரொம்ப அழகான அனுபவம். பரஸ்பர பரிமாற்றம், நிபந்தனைகளில்லாத அன்பு, குடும்பம், குழந்தைகள்... எல்லாம் ரஸமாகத்தான் இருக்கு. ஆனா... அத்தனையிலயும் சரடு மாதிரி ஓடற விஷயம் என்ன தெரியுமா...? பொஸஸிவ்னஸ்! புருஷன், பெண்டாட்டியோட உடைமை, அவள் அவனோட உடைமை, குழந்தைகள் இரண்டு பேருக்கும் உடைமை...! எப்படியோ ஏதாவதொரு கட்டத்துல இனிமையான பந்தம்ங்கறது இறுகின ஆதிக்க உணர்வா ஆயிடுறதைத்தான் நான் திரும்பத் திரும்பப் பார்க்கறேன். ஆதிக்கம் செலுத்தறதும் அந்த ஆதிக்கத்துக்கு உட்படுறதும்தான் கல்யாணம்ங்கற மாதிரி மாறிப் போயிடறது. 'பாதுகாப்பு'ன்ற ஒரு போர்வை வேற இதுக்கு... அந்த மாதிரி ஒரு உறவுக்குள்ளே என்னால கட்டுப்பட முடியாது; மகிழ்ச்சியா இருக்க முடியாது..."

நளினிக்கு அச்சமாக இருந்தது.

"உங்க மாப்பிள்ளை குளிக்கவே மாட்டேங்கறாரே, ஏன்?"
"நான்தான் சொன்னேனே, எங்க வீட்ல நெறைய பேர் மூக்குல விரலை வைக்கிற மாதிரி இருப்பாங்கன்னு."
- ஆர்.தங்கராஜ்

வீட்டின் நான்கு சுவர்களுக்குக் கூட தெரிய விடாமல் தனது மனச்சுவருக்குள் அவள் சிறை வைத்தவை இவனுக்கு எட்டியிருக்குமோ. நுண்ணுணர்வினால் கிரஹித்திருப்பானோ? உஷா ஏதாவது சொல்லி...? சே! சே... நிச்சயமாய் அப்படி இராது.

அவள் மௌனம் அவனுக்குக் கவலை தந்திருக்க வேண்டும். "ஸாரி நளினி! உங்க இரண்டு பேரையும் பத்தின விமர்சனமா இதை எடுத்துக்க வேண்டாம்... ஐ நோ, யு ஆர் எ வெரி வெரி ஹாப்பி கபிள். இங்கே வரபோது நான் ரொம்ப ரொம்ப சௌகர்யமா உணர்றேன்" என்றான்.

ஆறுதலும் ஆச்சர்யமுமாக அவளுக்குள் உணர்வுச் சுழல் கிளம்பி தலை கிறுகிறுத்தது. தான் மிகச் சிறந்த நடிகையாக வளைய வந்ததை, வந்து கொண்டிருப்பதை எண்ணி, தனக்குத்தானே பாராட்டு கூறிக் கொண்டாள் நளினி. "உங்க முடிவு சரின்னு உங்களுக்கு நிச்சயமா தெரிஞ்சிருந்தா சரிதான்..." என்றாள். "ஆனா தனியா இருக்கறது...?"

"நான் தனியா இருந்தாலும் தனிமைனால கஷ்டப் படலை போதுமா? சந்தோ...ஷமா இருக்கேன்."

"தட்ஸ் நைஸ்..."

"நீங்க என்ன சாப்பிடறீங்க...? காஃபி... டீ... ராத்திரி இங்கேயே சாப்பிட்டுட்டுப் போகலாமில்லே..?"

"காஃபி வேண்டாம். மூர்த்தி வந்ததும் சாப்பிடலாம். உங்களுக்கு வேலை இருந்தா பாருங்க. நான் கொஞ்சம் நேரம் டீ.வி பார்த்துக்கிட்டு இருக்கேன்.

"ஒரு பத்து நிமிஷத்துல வரேன்" என்று சமையலறை பக்கம் போனாள். ரமேஷ் டீ.வியில் செய்தி பார்க்க ஆரம்பித்தான். வாசல் மணி அடித்ததும் போய்த் திறந்தான்.

"ஹாய்!" சத்யா சுருக்கமாகச் சொல்லி விட்டு ஹால் சோபாவில் அமர்ந்து ஷூக்களைக் கழற்றியபடி இரைந்தான்: "அம்மா! ஒரு கப் டீ கிடைக்குமா?"

"தரேன்பா..." என்றபடி வெளியே வந்தவள் "வேறெதாவது வேணுமா சாப்பிட...?" - கேட்டுக் கொண்டாள்.



"வேண்டாம்... நாளைக்கு நான் மார்னிங் ஃப்ளைட்ல பெங்களூர் போறேன்மா... க்ளையன்ட் ஆபீஸ்ல கொஞ்சம் வேலை. நைட் ஃப்ளைட்ல திரும்பிடுவேன்."

"சரி... அப்பா வந்ததும் ஞாபகமாச் சொல்லிடு..."

அவன் தேநீர் அருந்திவிட்டு மேலே தன் அறைக்குச் சென்றதும் மீண்டும் வாசல் மணி அடித்தது. "மிஸ்டர் சத்யாவுக்கு ஏர் டிக்கெட் கொண்டு வந்திருக்கேன்" என்று ஒரு பணியாளர் உறையை நீட்டி கையெழுத்து பெற்றுக்கொண்டார்.

கதவைச் சாத்திவிட்டுத் திரும்பியவள் முகத்தில் நிம்மதி தெரிந்தது. பெங்களூருக்குத்தான் சத்யா போகிறான் என்கிற சாட்சியம் கிடைத்த நிம்மதி.

"என்ன உங்களுக்கு நீங்களே சிரிச்சுக்கறீங்க..?" டீ.வியிலிருந்து கவனம் சிதறியவனாகக் கேட்டான் ரமேஷ்.

"ஒண்ணுமில்லை..."

"இல்லே... ஏதோ இருக்கு... ஆனா சொல்லலைன்னா பரவாயில்லை" என்றான் சிரித்துக்கொண்டே.

"உரிய நேரத்துல சொல்றேனே..." என்றாள் கொஞ்சம் குரலிறங்கிப்போய்.

போன் அடித்து பேச்சை இடைமறித்தது. எடுத்துப் பேசியவள் முகத்தில் கலவரம் படர்ந்தது. "எந்த ஹாஸ்பிடல்?" என்றபடி தலையைப் பிடித்துக்கொண்டு அப்படியே தரையில் அமர்ந்தாள்.

*(மணம் வீசும்)*

# மிர்தாவுக்கு முளைத்த சிறகுகள்!



– சுவையான கதை



# உலகக் கோப்பை கால்பந்து!

– சுவாரசியமான தகவல்கள்

# ட்ரம்ஸ் சித்தார்த்!



– கவர் ஸ்டோரி

| | |
|---|---|
| 1000/- ரூபாய் பரிசுப் போட்டி | சிறுகதைப் போட்டி |

குழந்தைகளின் குதூகலம்!

# கோகுலம்

ஜூன் 2006

ரூ.6/- மட்டுமே

# நன்றி... வாக்காளர்களே!



பெருவாரியான வாக்குகள் வித்தி யாசத்தில் என்னை வெற்றி பெறச் செய்த இந்தத் தொகுதியைச் சேர்ந்த வாக்காளர் களுக்கும், இந்தத் தொகுதியைச் சேராத வாக்காளர் களுக்கும் என் நன்றியைத் தெரிவித் துக் கொள்கிறேன்...

- ஞா.ஞானமுத்து

எதுக்குக் காரணமே இல்லாம அடிக்கிறீங்க?

நாளைக்கு உனக்கு ரிசல்ட் வருதாமே. நாளைக்கு நான் ஊர்ல இருக்க மாட்டேனே.

- அம்பை தேவா

"ஒரு லட்சம் கொடுத்து வாங்கற அளவுக்கு இந்த ஸ்டெதாஸ்கோப்புல அப்படி என்ன விசேஷம்?"

"பேஷண்ட்டோட சட்டைப்பை மேல வெச்சதும் உள்ளே எவ்வளவு இருக்குன்னு சொல்லிடுமே."

- வீ.விஷ்ணுகுமார்



நான் தினமும் செல்போன்ல பாட்டுக் கேட்பேன்....





மனைவி கிட்ட இருந்து தானே...?

- கே.ஆனந்தன்

# மனைவிக்காக...

மனைவி இறந்த மறுநாளே இன்னொரு திருமணம் செய்து கொள்ளும் இந்தக் காலத்தில், எப்பவோ இறந்த தனது மனைவியைத் தெய்வமாக நினைத்து வாழும் கோபால் கவுண்டர், மனைவி சமாதியருகிலேயே தனக்கும் ஒரு சமாதி கட்டி, மரணத்துக்காகக் காத்திருக்கிறார். வாழ்வது செஞ்சி பக்கத்திலுள்ள சொக்கனேந்தல் கிராமத்தில், வயது தொண்ணூறு.

"என் மனைவி சின்னக் குழந்த என்னை வாழ வைச்ச தெய்வமய்யா... என்னோட மவராசியை நான் கட்டுன நேரம் சொக்கனேந்தல் கிராமத்துலயே பேர் சொல்ற ஒரு குடும்பமா என் குடும்பம் ஆகிப்போச்சு. விவசாயம், சத்திய மங்கலத்துல ரைஸ் மில்லுன்னு காமதேனு கணக்கா பெருகிச்சு செல்வம்" என்று உருகும் கோபால் கவுண்டரின் வாரிசுகள், திருமணமாகி தனித்தனி குடும்பங்களாக சொக்கனேந்தலில் வசித்து வருகின்றனர்.

1991-ல் கோபால் கவுண்டரின் மனைவி சின்னக் குழந்தை இறந்துவிட, அந்த சோகத்தை அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. தன் மனைவியின் உடலை வராக நதியாற்றங்கரையில் தன் பூர்வீகக் காட்டில் புதைத்து, சமாதி எழுப்பியிருக்கிறார். கடந்த பதினான்கு வருடங்களாக தினசரி அங்கு தவறாது சென்று வருகிறார்.

இத்தனை நாட்களாக சின்னக் குழந்தையின் சமாதி வெட்ட வெளியில்தான் இருந்து வந்துள்ளது. என்ன நினைத்தாரோ, சில மாதங்களுக்கு முன்பு தம் மனைவியின் சமாதி அருகே, தமக்கும் ஒரு சமாதிக்காக பள்ளம் தோண்டியிருக்கிறார் கோபால் கவுண்டர்.

"நான் செத்ததுக்கப்புறம் என்னோட பையனுங்க என்னை எங்கன புதைப்பாங்கன்னு சொல்ல முடியாது. அதான் நான் உசுரோட இருக்கும்போதே சம்சாரத்தோட சமாதிக்குப் பக்கத்துலேயே எனக்கும் ஒண்ண சொந்தச் செலவுல கட்டிக்கிட்டேன். இனிமேல நான் எப்ப செத்தாலும் என்னை அந்த தெய்வத்துக்குப் பக்கத்துலயே புதைச்சிடுவாங்க. எனக்கு அது போதும்!" என்கிறார் கோபால் கவுண்டர் கண்கள் பனிக்க.

* மனைவி சமாதியருகில் கோபால் கவுண்டர்...

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

## மனைவி சொல்லே மந்திரம்!

**நா**ன் அரசு சார்பு நிறுவனம் ஒன்றில் பணி புரிந்து கொண்டிருந்தேன். அடிக்கடி சினிமா, ஹோட்டல் என்று போவது என் வழக்கமாக இருந்தது.

ஒரு நாள் என் மனைவி என்னிடம் 'இன்னும் இரண்டு வருடத்தில் நீங்கள் பணியிலிருந்து ஓய்வு பெற்று விடுவீர்கள். அதன்பின் இது போல ஆடம்பரமாகச் செலவு செய்ய முடியாது. உங்களுக்கு வரக்கூடிய பி.எஃப். மற்றும் கிராஜுவிட்டி தொகைகளை முதலீடு செய்தால் அதில் கிடைக்கும் வட்டி, உங்களுக்கு வரும் பென்ஷன் தொகை ஆகியவற்றுக்குள் குடும்பச் செலவை அடக்க வேண்டும். ஆகையால் இப்போதிலிருந்தே செலவை சிக்கனமாகச் செய்யுங்கள். தேவையில்லாத செலவுகளைக் குறைத்துக் கொள்ளுங்கள்' என்று கூறினாள். அன்றிலிருந்து படிப்படியாக தேவையில்லாத செலவுகளைக் குறைக்க ஆரம்பித்தேன். மாதா மாதம் ஒரு தொகை மீதமானது. அத்தொகையை வங்கியில் முதலீடு செய்தேன். தற்போது பணியிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டேன். மனைவி சொன்னதை கடைப்பிடித்ததால் குடும்ப வாழ்க்கை அமைதியான நீரோட்டமாக உள்ளது

**- சுந்தர் சுந்தரி, கோவை**


* இலங்கை மெக்கானிக்...

# இது எங்க பக்கம்

## ஊனம் ஒரு தடையல்ல!

**இ**லங்கை மட்டக்களப்பு பகுதியில் வசிக்கும் எனது உறவினர் ஒருவரின் அழைப்பின் பேரில், சமீபத்தில் இலங்கை சென்று வந்தேன்.

மட்டக்களப்பு பகுதி ஊர்களைச் சுற்றிப் பார்க்க ஒரு நாள், ஆட்டோ ஒன்றை வாடகைக்கு அமர்த்தினோம். மிகத் திறமையாக ஆட்டோ ஓட்டிய அந்த டிரைவருக்கு ஒரு கால் இல்லை. முன்பு காவல் துறையில் பணிபுரிந்த போது ஒரு விபத்தில் காலை இழக்க நேரிட்டதாம்.

இலங்கையைச் சுற்றிப் பார்க்க ஒரு வேன் ஏற்பாடு செய்து அதில் பயணித்த போது, நீர்க்கொழும்பு என்ற ஊர் அருகில், வேனின் சைலன்ஸர் உடைந்து விட்டது. அதைச் சரிசெய்ய அருகில் இருந்த மெக்கானிக் செட்டுக்குச் சென்றோம். அங்கே கண்ட காட்சி என்னை வியப்பில் ஆழ்த்தியது. அந்த செட்டின் உரிமையாளருக்கு (சிங்களர்) இரு கால்களும் வளர்ச்சி குன்றி சூம்பிப் போய் இருந்தன. நகர்ந்து நகர்ந்து வேலைகளைச் செய்தார்.

நம் ஊரில் உடல் ஊனமுற்றோர் பலர் பிச்சை எடுக்கும் அவலத்தைப் பார்க்கிறோம். நம்பிக்கையை மனத்தில் விதைத்து வாழத் தொடங்கிவிட்டால் மனிதர்கள் யாவரும் மகத்தாக வாழலாம்.

**- செ.அருமைநாதன், சென்னை**

ஊரிலிருந்து, உறவுக்காரர் வந்திருந்தார். வரவேற்று, நலன் விசாரித்து, உபசரித்து, பேசிக் கொண்டிருக்கும்போது கேட்டேன்.

''ஊர் எப்படியிருக்கு... விசேஷம் ஏதாவது உண்டா?''

''ஊருக்கென்ன... நல்லாத்தான் இருக்கு... வரதன்னு ஒரு பெரியவர் இருந்தாரே... அவர்தான் தவறிட்டாரு...'' என்றார், சாதாரணமாக.

நான் திடுக்கிட்டுப் போனேன். அதைக் கேட்ட மாத்திரத்திலேயே எனக்கொரு சம்பவம் நினைவுக்கு வந்தது.

அது ஒரு வெயில் காலம். கொளுத்திக் கொண்டிருந்தது வெயில். வெளியில் தலை காட்ட முடியவில்லை.

ஆடு மாடுகள்கூட மேய்ச்சலை மறந்து, அனல் காற்றுக்கு மூச்சிரைத்து கொட்டகையில் படுத்துக் கிடந்தன.

கானல் நீரோடி தகதகத்த வேளையில் ஒரு உருவம் மட்டும் சூட்டைப் பொருட்படுத்தாமல், பொங்கி வடியும் வியர்வையில் குளித்தபடி ஆடி, ஆடி நடந்து வந்தது.

நேரே எங்கள் வீட்டு வாசலில் வந்து நின்று, ''மாரிமுத்து...'' என்று குரல் கொடுத்தது. அப்பா எழுந்து வந்தார்...

''ஏண்டா... என் பையன் இங்க இருக்கானா...'' என்று கேட்டது.

''அடடா... இந்த வேகாத வெயில்லகூடவா இப்படி... உனக்கு மட்டும் நிலா காயுதா... இப்படி நிழலுக்கா வா...'' என்று கூப்பிட்டார் அப்பா.

''தூங்கிக்கிட்டுதான் இருந்தேன். மகன் குரல் கேட்டுது...'' என்று சொல்லிக்கொண்டே வரதன் உள்ளே வந்து,

''செல்வாவைக் கூப்பிடு....'' என்றார்.

''என்ன மாமா... உங்க மகன் செல்வராஜு, டெல்லியிலிருந்து வந்து ஒரு வாரம் உங்க கூட தங்கியிருந்துட்டு நேத்து தானே புறப்பட்டுப் போனாப்ல. நீங்கதானே வழியனுப்புனீங்க...'' என்று அப்பா நினைவு படுத்தினார்.

வந்தவர்,

''நான்தான் வழியனுப்பிச்சேன். ஆனா, அவன் திரும்பி வந்துட்டாப்ல இருக்கு. உன் வீட்ல பேசிக்கிட்டிருக்காப்ல இருக்கு...'' என்றார்.

''நான் சொல்லியா நம்பப்போறீங்க... உள்ளே போய்ப் பார்த்துக்கங்க...''என்று சொல்லிவிட்டார் அப்பா.

அவரும் வீட்டுக்குள் போய் எல்லா அறைகளிலும் தேடிவிட்டு ஏமாற்றமாய் திரும்பி,

''இங்கிருந்துதான் குரல் கேட்ட மாதிரி இருக்கு...'' என்று இழுத்தார்.

அப்பா மடியை அவிழ்த்துக் காட்டினார்.

''நல்லா பார்த்துக்கங்க...'' என்றார்.

அப்போது தெருவழியாகப் போன ஒரு ஆள், ''பெரியவரே... வுடாத... புடி... புடி.... மாரிமுத்து வைக்கப்போர்ல ஒளிச்சு வச்சிருக்காரு உம் மகனை...'' என்று வேடிக்கையாகச் சொல்லிவிட்டுப் போனான்.

அவன்மேல் பாய்ந்தார் அப்பா.

''அறிவுகெட்டவனே... வாயமூடிக்கிட்டுப் போகமாட்டே.... எதெதுல விளையாடறதுன்னு விவஸ்தையில்ல. உனக்கு இந்தக் கதி வராம பார்த்துக்க... போடா...'' என்று விரட்டினார்.

அதே நேரம் பெரியவர், ''செல்வா, செல்வா'' என்று அலறிக்கொண்டு வீட்டின் பின்புறம் ஓடி, வைக்கோல் போரைப் பிடுங்கி எறிய ஆரம்பித்தார்.

நாங்கள் போய்த் தடுத்தும்,

''எம்பிள்ளையை ஒளிச்சா வைக்கறீங்க...'' என்று ஆவேசமாகப் போரைக் கலைத்தார்.

மாடுகள் மிரண்டன.

நல்ல வேளையாக அவர் வீட்டி

பதுமம் சுதுமாரன்

லிருந்து ஆட்கள் வந்து அழைத்துப் போனார்கள்.

அன்று முழுக்க வீட்டில் அவர் குறித்துத்தான் பேச்சு.

பெரியவருக்கு செல்வராஜ் ஒரே மகன். அவனைப் பெற்றதும், தாய் இறந்து போனாள். பையனுக்கு அம்மா இல்லாத ஏக்கம் வந்து விடக் கூடாது என்று ரொம்பப் பாசம் காட்டி வளர்த்தார். அவனுக்கும் அப்பா மேல் பிரியம்தான். மேல்படிப்புக்காக ஊரை விட்டுப் போனான். அந்தப் பிரிவை பெரியவரால் தாங்க முடியவில்லை.

"அப்பவே பிள்ளை ஏக்கம் பெருசா போச்சு அவருக்கு. இத்தனைக்கும் செல்வராஜ் வாரம் தவறாம லெட்டர் போடுவான். மாசத்துக்கொருதரம் வந்து போவான். அவன் இருக்குற வரை மனுஷன் சாதாரணமா இருப்பாரு. அவன் போனதும் பறிகொடுத்தா மாதிரி ஆயிடுவாரு. அப்பப்ப இந்த

# பித்து!



"அந்த ஆளு காதுல செல்போன் வச்சுக்கிட்டு, தலையை மட்டும் ஆட்டிக்கிட்டு, ஒண்ணுமே பேசாம இருக்காரே...?"

"எதிர்முனையில் அவர் மனைவி பேசுவாங்க!"

- வெ.நா.சிவகுமார்



மாதிரி நடந்துக்குவாரு! ஆரம்பத்துலருந்தே ரொம்பப் பாசம் வைக்காம கொஞ்சம் விலகியே இருந்திருந்தா இப்படியாகியிருக்காது" என்று என்னைப் பார்த்துக்கொண்டே சொல்லுவார் அப்பா.

எனக்கு ஒரு மாதிரியாக இருக்கும். அப்படிச் சொன்னதால் அப்பா, என்னைவிட்டுக் கொஞ்சம் விலகிப் போனதுபோல இருந்தது.

அப்படியெல்லாம் கணக்குப் பார்க்காமல் பிள்ளைப் பாசத்தில் பைத்தியமாகவே மாறிவிட்ட அந்தப் பெரியவர் மீது எனக்கு அன்பும் அனுதாபமும் ஏற்பட்டன.

"நான்தான் உங்க பையன் செல்வராஜ்னு நினைச்சுக்கங்க. ஏன் வீணா கஷ்டப்படறீங்க" என்று ஒரு முறை அவரிடம் சொல்லப்போய், "பலே, பலே" என்று கொண்டாடியது நினைவிருக்கிறது.

அவர் மகன் படித்து, வேலை தேடிக்கொண்டதுடன் கல்யாணமும் பண்ணிக்கொண்டான். அப்பாவைத் தன்னுடன் அழைத்துச் சென்றான். அப்பாவைக் கவனித்துக் கொள்ளத்தான் கல்யாணமே பண்ணிக்கொண்டான் அவன்.

ஆனால், பெரியவரை அவனால் வைத்துக்கொள்ள முடியவில்லை.

'என்னால் இவர்கூடவே உட்கார்ந்திருக்க முடியவில்லை. ஆபீஸுக்குப் போய்விட்டால், என்னைத் தேடிக்கொண்டு வந்துவிடுகிறார். டாக்டர்கள்கிட்ட காட்டிப் பார்த்தேன். வைத்தியம் செஞ்சாலும், கொஞ்ச நாளைக்குச் சரியாயிருக்காரு. ரோட்ல, டிராஃபிக்ல மாட்டிக்கிட்டு எதனா ஆயிட்டால், அவன் மட்டும் எவ்வளவு நாள்தான் காவல் காத்துக்கிட்டிருப்பாள்...' என்று கொண்டுவந்து ஊரிலேயே விட்டுவிட்டான்.

மாதந்தோறும் பணம் அனுப்பினான்.

நிலைமை எல்லோருக்கும் புரியத்தான் செய்தது.

அவரேகூட, 'ஆமா... நான் அப்படி பண்ணக்கூடாதுதான். எல்லார்க்கும் சங்கடம். பையனுக்கும் கெட்டபேரு... இனிமே அப்படிச் செய்ய மாட்டேன். செல்வம் நல்லா இருக்கான். பெரிய படிப்பு, பெரிய வேல... மருமக மாசமா இருக்கு... குட்டி செல்வா வருவான். அவங்கப்பன வளர்த்த மாதிரி, அவன நானே வளர்ப்பேன்'னு தெளிவாகப் பேசினாலும், அவ்வப்போது ஏதாவது ஒரு திசையில் பிள்ளையைத் தேடிக்கொண்டு,

'செல்வா... அந்தத் தோப்புலருந்து கூப்பிடறாப்ல இருக்கு, பக்கத்துத் தெருவுல பேசறாப்ல இருக்கு...'என்று போய்க் கொண்டுதான் இருந்தார்.

"எப்படிச் செத்தாரு..." என்று கேட்டேன் வந்தவரிடம் வருத்தமாக.

"எப்பயும் போல பிள்ளை ஞாபகம் வந்து தோப்பு துறவுன்னு அலைஞ்சுக்கிட்டிருந்திருக்காரு... எவனோ விஷமத்தனமா, 'செல்வம் கிணத்துக்குள்ள இருக்காரு'ன்னு சொல்லியிருக்கான். நேரா கிணத்துலபோய் இறங்கிட்டாரு... உனக்குத்தான் தெரியுமே... அவருக்கு நீச்சல் தெரியாதுன்னு..." என்றார் அவர்.

# ஒரு பக்கம்!

'டாவின்சி கோட்' புத்தகம் வெளிவந்தபோது டான் ப்ரெளன் சந்தித்த அதே எதிர்ப்புதான் இப்போது டாம் ஹாங்க்ஸுக்கும். 'இந்தப் படத்தை வெளியிட நாங்கள் அனுமதிக்க மாட்டோம்' என்று கிறிஸ்தவர்களில் ஒரு பகுதியினர் லண்டனில் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

டாவின்சி கோடுக்கு ஏன் இவர்கள் டூ விட்டார்கள்? காரணம் இருக்கிறது. டான் ப்ரெளன் தமது புத்தகத்தில் ஏசுநாதரை ஒரு குடும்பஸ்தராக 'கன்வர்ட்' செய்திருக்கிறார். மேரி மெக்டெலென் எனும் பெண்மணியை ஏசுநாதர் திருமணம் செய்து கொள்கிறார். அவர்களுக்கு குழந்தைகள் பிறக்கின்றன. ஏசுநாதரின் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகிறார்கள். அவர்கள் திருமணம் செய்து கொண்டு அவர்களுக்கும் குழந்தைகள் பிறக்கின்றன. இப்படியாக ஏசுநாதரின் வம்சம் அறுந்துபோகாமல் தொடர்கிறது. இன்றளவும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

இதைச் சொன்னதால் தான் டான் ப்ரெளனுக்கு அத்தனை எதிர்ப்பு. இதைச் சொன்னதால்தான் டாவின்சி நாவல் 60 மில்லியன் புத்தகங்கள் வரை விற்றுத் தீர்ந்திருக்கிறது.

நாவலைவிட திரைப்படத்துக்கு எதிர்ப்பு வலுத்திருக்கிறது. 'இது முன்பே எதிர்பார்த்ததுதான்' என்று சொல்லிச் சிரிக்கிறார் டாம் ஹாங்க்ஸ். 'குறிப்பிட்ட ஒரு பகுதியினர் இந்தப் படத்தை பார்க்க வரமாட்டார்கள் என்று தெரிந்தே இந்தப் படத்தை உருவாக்கினோம். ஆனால் உண்மையில் இது ஒரு ஜாலியான படம், துப்பறியும் படம். விறுவிறுப்பாக அமைத்திருக்கிறோம். ஏசுநாதரின் புனிதத் தன்மையைக் கெடுக்க வேண்டும் என்ற நோக்கம் எங்களுக்குக் கிடையாது' என்கிறார் டாம் ஹாங்க்ஸ்.

'இரண்டாயிரம் வருட புனித நம்பிக்கைகள் உதிர்ந்துவிடும்' என்று கத்தோலிக்கர்கள் அலறுகிறார்கள். அவர்கள் அலறுவதற்குக் காரணம் இருக்கிறது. 'டாவின்சி புத்தகத்தை எத்தனை பேர் நம்புகிறீர்கள்' என்று நேஷனல் ஜியாகிராஃபிக் சேனல் கனடாவில் ஒரு சர்வே நடத்தியபோது, 32 சதவீத மக்கள் டாவின்சியை நம்புவதாகவும் ஏசுநாதரை ஒரு குடும்பஸ்தராக ஏற்றுக்கொண்டு விட்டதாகவும் சொல்லியிருக்கிறார்கள்.




'சர்ச்சைகள் இருந்தால்தான் வெற்றி' என்று திரைப்படக் குழுவினர் கண் சிமிட்டுகிறார்கள்.

- மருதன்

# வெற்றியின் ஃபார்முலா!

திடீரென நாங்கள் ஒளிந்திருந்த வைக்கோல் படப்பை நாய்கள் சூழ்ந்து கொண்டதால் எங்கள் மூவருக்கும் உயிரே போன மாதிரி ஆனது. ஏற்கெனவே எங்களுக்கும் அந்த நாய்களுக்கும் முன்பகை உண்டு என்பதை ஊரே அறியும்.

போன சனிக்கிழமைகூட சிவனாண்டி அந்தச் செவலை நாயைக் கல்லால் அடித்ததாகப் பெருமையாக என்னிடம் சொன்னான். நான் மறந்திருக்கலாம். அந்த நாய் மறந்திருக்குமா?

நேரமாக ஆக எங்களைத் தேடி ஒரு பயலும் வரவில்லை. அனேகமாக ராசப்பன் அவன் பாட்டியோடு படுத்துத் தூங்கியிருப்பான். கூட விளையாடிய பயல்களும் காணாமல் போய்விட்டார்கள்.

ஒருமணி நேரத்துக்கும் மேலாக எங்களைச் சுற்றிக் குரைத்த நாய்களைப் பற்றி நாங்கள் கவலையே படவில்லை. மூச்சுவிட்டால் தானே கவலைப்படுவதற்கு. அந்த நாய்களும் வெறுத்துப்போய் 'போங்கடா மனுஷங்களா' என்று நாய் பாஷையில் திட்டிவிட்டுப் போய்விட்டன.

இரவு 12 மணிக்குமேல் மெதுவாக வெளியே வந்த நாங்கள், உடம்பெல்லாம் நமநமவென்று அரிப்பெடுக்க ஊர்க் குழாயில் குளித்துவிட்டு வீடு போய்ச் சேர்ந்தோம்.

இப்போதெல்லாம் குழந்தைகள் 'திருடன் போலீஸ்' விளையாடுகிறார்களா, தெரியவில்லை...

சினிமாமணி நாடகம் போட வேண்டும் என்று சொன்னவுடன், மேற்சொன்ன



விளையாட்டுகளையெல்லாம் விட்டுவிட்டு நாங்கள் தயாரானோம்.

**ம**ணி வீட்டுத் திண்ணையில் நாங்கள் கூடியபோது, அந்தச்



# நடுராத்திரியும் செவலை நாயும்...

கு. ஞானசம்பந்தன்

சுற்றுவட்டாரத்தில் நடக்கவிருக்கும் நாடக நோட்டீஸ்களை எல்லாம் சேகரித்து வைத்திருந்தான் மணி.

'வள்ளி திருமணம்', 'வீரபாண்டிய கட்டபொம்மன்- மூன்றாம் பாகம்', 'அரிச்சந்திரா மயான காண்டம்', 'பவளக்கொடி', 'சத்தியவான் சாவித்ரி...' இந்த நாடக நோட்டீஸ்களை எல்லாம் பார்த்தபோது, முடிவெட்டும் முத்துராக்கு சொன்ன 'அரிச்சந்திர மயான காண்டம்' நாடகத்துக்குச் செல்ல முடிவு செய்தோம்.

எங்கள் குழுவுக்குத் தலைமையேற்க முத்துராக்கு பெருந்தன்மையாக ஒப்புக்கொண்டார். நாடகம் பார்க்க இரவு பத்து மணிக்குமேல் கிளம்பினோம்.

**"இ**ந்த வாட்டி சைக்கிள்ல போக வேண்டாம்டா" என்று போன தடவை அடி வாங்கிய கவலையோடு சொன்னான் செவத்தக்காளை.

சினிமாமணி வேகமாக எங்களை நோக்கி வந்து, "எங்க முத்துராக்கு, இன்னும் வரலையா?" என்று கேட்டான். "அதுசரி மணி, நாம எப்படி ஊருக்குப் போகப் போறோம்? எப்படியும் ஐந்து மைல் இருக்குமே" என்று நான் கேட்டேன். அதற்கு மணி, "கவலைப்படாதடா. இன்னிக்கு ராத்திரி பெரிய காவல் வீட்டு டிராக்டர் ட்ரெயிலரோடு (சினிமா டிரெய்லர் அல்ல. டிராக்டருக்குப் பின்னாடி பாரமேற்றி வருவது) தேங்காய் ஏத்த அந்த ஊருக்குப் போவுது. நாம அதுல ஏறிப் போறோம். விடியக்காலைல அதுல தான் வர்றோம்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே பெரிய சத்தத்தோடு டிராக்டரும் அதன் பின்னே இருந்த டிரெய்லரில் பந்தாவாக முத்துராக்கும் வந்து சேர்ந்தார்கள்.

முத்துராக்கு தலைப்பாகை துண்டெடுத்து எங்களை நோக்கி உற்சாகமாக வீசினார். நாங்கள் அவசர அவசரமாக ஓடிச்சென்று அதன் பின்டயரில் காலை வைத்து உள்ளே ஏறிக் குதித்தோம். ஏற்கெனவே அதில் தேங்காய் போட்டு மூடி வருவதற்காக தார்ப்பாய் போட்டிருந்தார்கள். அது மெத்தை ஜமுக்காளம் போல சுகமாய் இருந்தது.

வண்டி போட்ட சத்தமும் டயர்கள் குதித்த குதியும் வண்டி ஆடிய பேயாட்டமும், நீங்களெல்லோரும் ஒருமுறை கட்டாயம் டிராக்டரில் போய்ப் பார்க்க வேண்டும். அப்போதுதான் அந்தப் பிரயாண 'சுகம்' தெரியும்.

சினிமாமணி டிரைவரோடு பேச்சுத் துணைக்கு உட்கார்ந்து கொண்டான். முத்துராக்கு பெரிய பொட்டலம் ஒன்றை

''முன்னே மாதிரி துப்பாக்கியால குறி தவறாம சுட முடியல!''

'' 'கன்' திருஷ்டியா இருக்கும்!''

- அம்பை தேவா



அவிழ்த்தார். பொரி, பொரிகடலை, கடலைப்பருப்பு என்று சகல விறுவிறுப்பான அயிட்டங்களும் இருந்தன. ஆனால் தின்பதுதான் கஷ்டமாக இருந்தது. வண்டி ஆடிய ஆட்டத்தில் பொரிகடலையைக் கையிலெடுத்து வாயில் போட்டால், அது வாயைத் தாண்டி அடுத்தவன் வாயில் போய் விழுந்தது.

டிராக்டர் வண்டி ரோடே இல்லாத இடங்களில் கூட விரைவாகச் சென்றது. ஒருவழியாக நாங்கள் அந்தக் கிராமத்தை அடைந்தோம். பெரிய மைதானம். நாடகம் பார்க்க வந்த ஊர்மக்கள் பாய், போர்வை, படுக்கை சகிதமாக வந்து உட்கார்ந்து கொண்டும் படுத்துக் கொண்டும் நாடகம் பார்க்கத் தயாராக இருந்தார்கள்.

முத்துராக்கும், சினிமா மணியும் எங்களை அழைத்துக்கொண்டு நாடகக் கொட்டகையின் உள்ளே இருந்த மேக்கப் ரூமுக்குச் சென்றார்கள். உள்ளே ஒரு குண்டு பல்பு எரிந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு நாடக நடிகரும் தங்களுக்கு முன்னே ஒரு பெட்டியை வைத்து அதிலிருந்து கண்ணாடியை எடுத்து வைத்து, தங்களுக்குத் தாங்களே மேக்கப் போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு நடுவே கம்பீரமான உருவத்தோடும், மொட்டைத் தலையோடும் பண்ணையார் போல ஒருவர், 'எல்லாரும் வாங்கய்யா! வணக்கம் ஐயா!' என்று இரண்டு கைகளையும் குவித்து வணக்கம் சொல்லி மகிழ்ச்சி பொங்க எங்களை வரவேற்றார்.

சினிமாமணி, ''இவர் தாண்டா நாடக உலகத்துல பெரிய சிங்கம்போல இருக்கிற உடையப்ப தேவர்'' என்று மெதுவாக எங்கள் காதுகளில் கிசுகிசுத்தான். நாங்கள் பயபக்தியோடு அவர் முன்னே போய் நின்றோம். எங்களையெல்லாம் அன்பாகப் பார்த்துவிட்டு "எல்லாரும் நல்லாப் படிக்கணும்யா" என்று சொன்னவர், ''என்ன முத்துராக்கு, சௌகரியமா?'' என்று கேட்டார். முத்துராக்கு சந்தோஷமாக "ஆண்டவன் புண்ணியத்துல நல்லா இருக்கேன் ஐயா. கந்தர்வக்கோட்ட நாடகத்துல உங்களைப் பார்த்தது. விடிய விடியப் பாடி எல்லாரையும் சந்தோஷப்படுத்தினீங்க, நீங்க பல்லாண்டு வாழணும்" என்றார்.

எங்களுக்குச் சுக்குக் காபி கொடுத்தார்கள். உடையப்பதேவர் தலையில் கிரீடம் அணிந்து அரிச்சந்திர மகாராஜனாக மாறினார். நாடகத்துக்குரிய சீன் செட்டிங், இசைக்கருவிகள், உடையணிகலன்கள், ஒப்பனைப் பொருட்கள் அனைத்தையும் நாங்கள் சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தோம். ஆனால் அவர்கள் யாரும் வசனம் பேசி ஒத்திகை பார்க்கவில்லை. காரணம் கடையநல்லூரில் இருந்து ராஜபார்ட் மஜீத், புதுக்கோட்டையிலிருந்து ஸ்த்ரீபார்ட் சித்ராதேவி, மதுரையிலிருந்து ஆர்மோனியக்காரர் ஆனையூர் வெள்ளையப்பா, கட்டக்குளத்திலிருந்து காமெடி நடிகர் பபூன் குருசாமி என்று வருவதால் தாங்கள் ஏற்கெனவே தங்கள் நாடக ஆசான்களிடம் படித்ததை நாடக மேடையில் மக்கள் முன்னிலையில் தட்டுத் தடங்கலின்றிப் பேசவும், பாடவும் பயிற்சி பெற்றிருந்தார்கள்.

திடீரென்று வெளியே பெரிய வெடிச் சத்தம் கேட்டது.

*(ரீல் சுற்றும்)*

படம் : புதூர் சரவணன்

# “ நாங்க தோற்கவே இல்லை!”

சந்தோஷத்தை வெளிக்காட்ட வியலாத நிலையில் இருக்கிறார் எஸ்.வி.சேகர். மைலாப்பூர் தொகுதியில் அ.தி.மு.க. சார்பில் போட்டியிட்டு ஜெயித்து முதன்முறையாக சட்ட சபைக்குள் நுழைந்தாலும், முதல்வராக ‘அம்மா’ இல்லாத சோகம், அவரின் வார்த்தைகளில் வெளிப்பட்டது.

“**நா**ன் ரொம்ப கஷ்டப்பட்டு ஜெயிச்சேன்னு சொல்றாங்க... எல்லாம் சும்மா. அம்மாவோட முகமும், அவங்க செய்த சாதனைகளும் கைவசம் இருக் கறப்போ எதுக்குக் கஷ்டப்படணும்? ஏதோ சென்னை தி.மு.க.வோட கோட் டைன்னு சொன்னாங்க. இப்போ என்ன ஆச்சு பார்த்திங்களா? சென்னைல இந்த அளவுக்கு வெற்றி கிடைச்சதுக்குக் காரணம் வீராணமும், சட்டம்-ஒழுங்கும் தான். எங்க கட்சி தோக்கவே இல்லை. அம்மா ஆட்சி அமைக்கல, அவ்வளவு தான். இதுவரைக்கும் இல்லாத அளவுக்கு மிகப்பெரிய எதிர்கட்சியா அ.தி.மு.க. வந்திருக்கு. வாக்கு சதவிகிதத்தை எடுத்துப் பார்த்தா தோத்தது யாருன்னு நல்லாவே தெரியும். இழந்த சின்னத்தையே மீட்ட கட்சி அ.தி.மு.க. அதனால இதெல்லாம் எங்களுக்கு ஒரு தோல்வியே இல்லை.

அம்மா சட்டசபைக்கு வரமாட் டேன்னு சொன்னதைக் கூட விமர்சிக்க றாங்க விவரம் புரியாதவங்க. அம்மாவுக் குக் கடந்த காலங்கள்ல நிறைய கசப்பான அனுபவங்கள் தி.மு.கவால நடந்திருக்கு. அதனால வரலைன்னு சொல்லியிருக் காங்க. ஆனா கருணாநிதிக்கு அப்படி எதுவும் நடக்கலியே... அதனால அது வேற... இது வேற...

விஜயகாந்த் இந்தத் தேர்தல்ல நிறைய வோட்டு வாங்கியிருக்கறது உண்மைதான். ஆனா இந்த எட்டு, எட்டேகால் சதவிகிதத்தை வச்சு அவரால ஒண்ணும் செய்ய முடியாது.

தி.மு.க. ஆட்சி நிலைக்காது. நல்ல படகா இருந்தா, ‘நாங்களும் ஏறிக்க றோம்’னு கூட்டணிக் கட்சிங்க சொல்லியிருப்பாங்க. கவிழ்ற படகா இருக்கறதாலதானே ‘நீங்க ஏறுங்க நாங்க வேடிக்கை பார்க்கறோம்’னு சொல்லியிருக் காங்க. இதுல இருந்தே தெரியலியா... இந்த ஆட்சி எப்படி இருக்கப் போகுதுன்னு.

பலபேர் என்னை காமெடிய னாத்தான் பார்த்தாங்க. ஆனா, நான் காமெடி நடிகன் மட்டுமல்ல... எனக்கு பல திறமைகள், எண்ணங்கள் இருக்குன்னு புரிய வச்சு, வோட்டு வாங்கி, ஜெயிச்சி ருக்கேன். ஒரு நல்ல எம்.எல்.ஏவா, அரசியல்வாதியா என்னை நிருபிக் கப் போறேன்.”

- ஆர்.முத்துக்குமார்

படம்: ஸ்ரீஹரி





அர்ஜுனனிடம் சர்வக்ஞத்வத்தை எடுத்துச் சொன்ன பகவான் அதற்கும் மேல், தான் வந்து அவதரித்தது தனது சங்கல்பத்தினாலே என்று அழகாக எடுத்துக்காட்டுகிறான்.

பகவான் அர்ஜுனனிடம் மேலும் சொல்கிறான்:

"பிறப்பற்றவனாய் உன்னை இருக்கச் செய்ய நான் பல விதமாய் வந்து பிறக்கிறேன். அவ்வாறு நான் பிறப்பதற்குக் கர்மாக்கள் காரணம் அல்ல. தர்மமானது வாட்டமுறும் தருணத்தில், அதர்மம் தலைவிரித்தாடும்படியான தருணத்தில் நான் வந்து பிறக்கிறேன். என்னை நான் சிருஷ்டித்துக் கொள்கிறேன்: 'ஆத்மானாம் ச்ருஜாமி' "

- இரண்டு பொருள் சொல்லலாம் இதற்கு. பகவானும் வந்து பிறக்கிறான். 'ஆத்மானாம் ச்ருஜாமி' என்றால்,

- ரொம்ப அழகாகச் சொல்கிறான் பகவான். "அவதார பிரயோஜனம் என்ன என்றால், சாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும், துஷ்டர்களை சிக்ஷிப்பதற்காகவும் யுகந்தோறும் நான் வந்து பிறக்கிறேன்" என்கிறான்.

நாம் கதை கேட்கிறோம். 'திரேதா யுகத்திலே நடந்தது, துவாபர யுகத்திலே நடந்தது, கிருத யுகத்திலே நடந்தது. பகவான் அப்போ அவதாரம் பண்ணினான். இப்போ அவதாரம் பண்ணினான்' என்றெல்லாம் புராணங்களிலே சொல்லிக் கேட்கிறோம்.

ஆனால், 'கலியுகம் பிறந்து ஐயாயிரம் வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டதே... இப்போது ஓர் அவதாரம் பண்ணக் கூடாதா! பரமாத்மா?' என்று ஒரு சந்தேகம் நமக்கு எழுகிறது. அது மாத்திரமில்லை... இன்னொரு சந்தேகமும் வருகிறது.

# குறையொன்றுமில்லை

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

பகவானுடைய ஆத்மாவாகிய ஞானிகளையும் பிறப்பிக்கச் செய்கிறான் உலகத்திலே.

"ஆசார்ய புருஷர்களாக ஞானிகளைப் பிறக்கச் செய்து, அவர்கள் மூலமாகவும் உலகத்தைத் திருத்திப் பணி கொள்கிறேன். நானும் வந்து பிறந்தேன். உயர்ந்த மஹான்களையும் உலகிலே பிறப்பிக்கச் செய்வேன்" என்றான் பரமாத்மா.

"என்னுடைய அவதார பிரயோஜனம் என்ன என்று கேட்கிறாயா...?

பரித்ராணாய ஸாதுனாம்
வினாசாய சதுஷ்கிருதாம்
தர்ம ஸம்ஸ்தாப நாதாய
ஸம்பவாமி யுகே யுகே"

'ஒரு ஹிரண்ய கசிபு இருக்கிறபோது பரமாத்மா அவதாரம் பண்ணினானே; ஒரு ராவணன் இருக்கிறபோது பகவான் அவதாரம் பண்ணினானே. ஒரு சிசுபாலனை வதம் பண்ண பகவான் அவதாரம் பண்ணினானே... தத்துல்யமாய் (கண்ணுக்கு நேராய்) இப்போது நிறைய பேர் அசுரர்களாக இருக்கிறார்களே இந்த உலகத்திலே! ஒருத்தருக்காக அவதாரம் பண்ணியவன், இப்போது பல பேர் இருக்கிறபோது ஏன் வந்து அவதரிக்கக் கூடாது?' என்று சந்தேகம் வரும். அதனால்தான் கீதையிலே அந்தச் சந்தேகத்தைப் போக்குகிறான் பகவான்.





இதற்காகத்தான் 'வினாசாய சதுஷ் கிருதாம்' என்று அழகாக ஒரு 'ச' போட்டிருக்கிறான் பகவான் இந்த ச்லோகத்திலே.

இந்த 'ச' படுத்துகிற பாடு இருக்கிறது பாருங்கள்...!

இப்படி கவிதையிலே 'ச' சப்தம் வருவதற்கு அவ்யயம் என்று பெயர். 'ச', 'து', 'அபி' போன்ற சப்தங்கள் இவ்வாறு அவ்யயமாக சம்ஸ்கிருதத்திலே அமையும். சில ச்லோகங்களிலே சந்தஸ்ஸை (பந்தம்) நிரப்புவதற்காக இவை வந்து சேரும். எங்கேயாவது ஓர் அக்ஷரம் குறைகிறது என்றால் அதற்கு ஒரு 'ச'வைப் போட்டால் அந்த அக்ஷரம் பூர்த்தி ஆகிவிடும்.

அனுஷ்டுப் சந்தஸ்ஸில் ச்லோகம் என்றால் 32 அக்ஷ

"இந்த ஆறு விஷயங்களை யார் உணர்கிறார்களோ அவர்கள் மறுபடியும் வந்து பிறக்க மாட்டார்கள்!"

''மான் மீது புலி பாய்கிறது. இது நிகழ் காலமா? இறந்த காலமா? எதிர்காலமா?''

''மானுக்கு உயிரிருந்தால் நிகழ்காலம்; உயிரில்லை என்றால் இறந்த காலம்; மான் தப்பித்திருந்தால் அதுக்கு இனி நல்ல எதிர் காலம் ஸார்!''

– ஆவடி எஸ். ரமேஷ்குமார்



ரத்திலே எழுதவேண்டும். 31 அக்ஷரம் வந்துவிட்டது; ஒன்று வரவில்லை என்றால், ஒரு 'ச'வைப் போட்டுவிட்டால் சந்தஸ் பூர்த்தியாகிவிடும்.

இப்படி ஒலியை இட்டு நிரப்புவதற்கும் வரும்; விசேஷ அர்த்தத்தைக் காட்டியும் அது நிற்கும்.

ஒரு காட்டிலே வியாஸருடைய மிகப் பெரிய விக்ரஹம் இருந்தது. அதற்குப் பெரிய தொப்பை! தொப்பையின் நடுவிலே தொப்புள்!

கவி காளிதாஸன் அந்தப் பக்கம் போனான். போகிற போக்கில் வியாஸரையே அவன் கேலி பண்ணுகிறான்! ''இவரென்ன 'ச'காரப்ரியர் அல்லவா! பெரிய கவியென்று இவரைப் போய்க் கொண்டாடுவதாவது'' என்று அந்த விக்ரஹத்தினுடைய தொப்புளுக்குள் ஆள் காட்டி விரலை நுழைத்துக் கேலியாய்க் கேட்கிறான்: ''இவர்தானே 'ச'காரப்ரியர்?'' என்று! ''ஒரு சுலோகத்திலே எத்தனை 'ச'காரம் போடுகிறார் இவர். 'ச'காரம் இல்லாமல் இவரால் கவிதையே இயற்ற முடியாது'' என்று பரிகாசத்துடன் தொப்புளுக்குள் விரலை நுழைத்தவனுக்கு, அப்புறம் அதை எடுக்கவே முடியவில்லை! விரல் அகப்பட்டுக் கொண்டது. தொப்புளுக்குள்ளேயே நின்றுபோய் விட்டது!

''என்னைப் பார்த்துக் கேலி பண்ணுகிறாயா நீ? 'ச' இல்லாமல் நீ சுலோகம் சொல்லிவிடுவாயோ?'' என்று காளிதாஸனைப் பார்த்துக் கேட்கிறார் வியாஸர்!

''ஆஹா, சொல்லுவேனே...'' என்கிறான் காளிதாஸன்.

''ஏதோ மனத்திலே தயாராய் வைத்திருக்கிறாய் போலும்... அந்த சுலோகம் வேண்டாம். நான் ஒரு விஷயம் சொல்லுவேன். அதைப் பற்றிய சுலோகம் பாட வேண்டும்'' என்றார் வியாஸர். சிலைக்குள்ளே இருந்தபடி பேசுகிறார்.

''அப்படியே சுவாமி!'' என்று காளிதாஸன் சொல்ல, அப்போது வியாஸர் அவனைப் பார்த்து ஒன்று கேட்கிறார்: ''திரௌபதிக்கு பஞ்சபாண்டவர்கள் எவ்வெப்போது என்னென்ன ஆகவேண்டும்?''

காளிதாஸனின் விரல் அப்படியே இருந்த இடத்திலேயே இருக்கிறது. அவன் கொஞ்சம் கூட யோசனையே பண்ணவில்லை. 'ச'வே இல்லாமல் ஒரு சுலோகம் சொல்லிவிட்டார். அதிலே 'ச'காரம் இல்லையே தவிர, நிறைய சமத்காரம் (சாமர்த்தியம்) இருந்தது!

உடனே, அப்படியே பிரத்யக்ஷமாகி விட்டார் வியாஸர்! ''நானும்தான் மகாபாரதம் ஒரு லட்சம் சுலோகம் சொன்னேன். எதிரே கணபதி உட்கார்ந்து எழுதினான். ஆனால், மஹாபாரதத்திலே இந்த மாதிரி ஒரு சுலோகம் கூட வரவில்லையே! எவ்வளவு அழகாக இருக்கிறது இந்த சுலோகம்!''என்று கொண்டாடினார் வியாஸர்.

ஆனால் பகவானுடைய வாக்கிலே கீதையிலே வந்த 'ச'காரம் சந்தஸ்ஸை நிரப்ப மட்டும் வந்ததல்ல. அதன் நோக்கம் உயர்ந்தது. அது எதைக் காட்டுகிறது என்றால், பகவானுடைய அவதாரத்துக்கு முக்கியமான பிரயோஜனம் என்ன என்பதைக் காட்டுகிறது.

துஷ்கிருத் (துஷ்டர்கள்) வினாசனம் (அழிப்பது) என்பது அந்த அவதாரத்தில்

முக்கியமல்ல...

அவனுடைய அவதாரத்தின் முக்கிய நோக்கம் சாது சம்ரக்ஷணம் (உயர்ந்தவர்களைக் காப்பாற்றுதல்) துஷ்கிருத் வினாசனம் என்பது அதன் ஊடே நடக்கக் கூடியதுதான். - இதைத்தான் அந்த 'ச'காரமானது காட்டுகிறது.

இப்போது பகவான் அவதாரம் பண்ணினானேயானால், அவன் கைக்கு நிறைய ஹிரண்ய கசிபுகள் கிடைக்கலாம். அவன் கைக்கு நிறைய ராவணர்கள் கிடைக்கலாம். ஆனால், ஒரு பிரஹலாதன் கிடைப்பானா இப்போது... அதற்காகத்தான் பகவான் காத்துக் கொண்டிருக்கிறார்.

பிரஹலாதன் போன்ற ஒரு நிஜ பக்தனுக்குக் கெடுதல் ஏற்பட்டால், பகவான் அவதாரம் இப்போதும் சித்தம். இந்த க்ஷணமே அவதாரம் பண்ணிவிடுவான் பகவான்.

ஆகவே பிரஹலாதனைப் போல் நிஜ பக்தி நமக்கு வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது. அப்படிப்பட்ட நிஜ பக்தி உடையவன் ஒருவன் மட்டுமே இருந்துவிட்டாலும் போதும்... பகவான் அரை குலைய, தலை குலைய ஓடி வருவான் - சாதுக்களைக் காப்பாற்றுவது தான் முக்கியம் என்பதை இந்த 'பரித்ராணாய சாதூனாம்' சுலோகம் காட்டுகிறது.

"ஜன்ம கர்ம மே திவ்யம்" என்றும் கூறுகிறான் பகவான் கீதையிலே.

'மே கர்மா திவ்யம்; மே ஜன்மா திவ்யம்- என் கர்மாவும் ஜன்மாவும் திவ்யமானவை' என்று பொருள்.

பகவானுடைய கர்மா என்றால் புண்ய பாபம் என்று பொருள் அல்ல...! இங்கே கர்ம சப்தத்துக்கு 'லீலா' என்று அர்த்தம். பகவானுடைய அவதார காலத்தில் அவன் பண்ணிய லீலைகளும் திவ்யம்.

"இதை உள்ளபடி உணர்கிறவன் ஒருவன் இருந்தால், (அப்படியும் ஒருவன் இருக்கிறானா?) அவன் மறுபடியும் பிறவியை அடையமாட்டான். என்னையே அடைந்து, உயர்ந்த நிலையிலே விளங்குவான்'' என்கிறான் பகவான்.

ஆகவே, பகவானுடைய அவதாரமானது இந்திர ஜாலம் போன்று பொய் அல்ல; உண்மையாக அவன் வந்து பிறக்கிறான். அவனுடைய அவதார காலத்திலே அவனுடைய ஞானத்துக்கு வரையறை இல்லை, சர்வக்ஞனாகவே வந்து அவதரிக்கிறான். அவன் திருமேனிக்கு வாட்டமில்லை. தர்மம் வாட்டமுறும் போது அவன் வந்து அவதரிக்கிறான் - அதர்மம் தலையெடுத்தாடுகிறபோது வந்து அவதரிக்கிறான். சாது பரிபாலனம் துஷ்கிருத் வினாசனம் என்பதை அவதார காலத்திலே அவன் பண்ணுகிறான். "இந்த ஆறு விஷயங்களை யார் உள்ளபடி உணர்கிறார்களோ, அவர்கள் மறுபடியும் வந்து பிறக்கமாட்டார்கள்'' என்று பகவானே கீதையிலே சொல்லியிருப்பதனாலே, பகவானுடைய அவதாரம் நம்முடைய பிறப்பை அறுப்பதற்காகத்தான்!

(வளரும்)



"எவ்வளவு டிப்ஸ் கொடுக்கிறதா உத்தேசம் சார்...?"

"இன்னும் சாப்பிடவே ஆரம்பிக்கலை, அதுக்குள்ள கேக்கறியே..?"

"நீங்க சொல்லிட்டா சாம்பார் வாளியை இங்கேயே வைக்கிறதா வேற டேபிளுக்கு மாத்தலாமான்னு முடிவு பண்ண வசதியா இருக்கும்!"

– சீர்காழி வி. ரேவதி

# தளிர்மொழி

இளம்பிறை

குட்டிக்கோழி
பொம்மைக்குட்டி...
அம்மா நாய் - பாப்பா நாய்
பாப்பாவோட அண்ணன் நாய்களுடன்
எட்டுக்குப் பத்து அறையில்
விரைந்து கொண்டிருக்கும் வாகனங்கள்
பறந்து கொண்டிருக்கும் விமானங்கள்
ஓர் இனிப்பு மிட்டாயில்
நிறைந்துறங்கும் மனம்
ஜீபூம்பா கனவுகளில் சிரிப்பு
இல்லம் முழுதும்
பொன் வண்டுகளையும்
வண்ணத்துப் பூச்சிகளையும்
பறக்கவிட்டுத் துளிர்க்கும்
தளிர்மொழி நிழலில்
சாய்ந்துகொள்ளத் தெரியாதவர்கள்
தூக்கிச் சுமக்கிறார்கள்
குழந்தைகளை... இறுத்தல்களுடன்

மற்ற இசையமைப்பாளர்கள் மாதிரி கிடையாது. கண் முன்னே தன் துறையில் நடக்கும் அநியாயங்களைத் தைரியமாக வெளியே சொல்பவர் பரத்வாஜ். "தமிழ் சினிமாவில் ஒரு ஒழுங்குமுறையே இல்லை" என்கிற அவர் ஆதங்கத்தின் வெளிப்பாடுதான் இந்தப் பேட்டி. "என் கூக்குரலுக்குப் பிறகாவது அதர்மங்கள் களையப் படவேண்டும்" என்கிற வேண்டுகோளோடு நம் கேள்விகளுக்குப் பதிலளித்தார்.

# "சேரன் மறைத்த உண்மை!"

**யுவன், ஹாரிஸ் ஜெயராஜ், வித்யாசாகர் போல நம்பர் ஒன் ரேஸில் நீங்க இல்லாதது ஏன்?**

"இங்கே யாரை நெ.1ன்னு சொல்றீங்க? அதிக படங்கள் பண்ணினா அவர் நம்பர் 1ன்னா? இல்லை அவர் என்னைக்கோ டாப்ல இருந்ததால அவர் நம்பர் 1ன்னா? அதுவுமில்லை அவர் ரொம்ப நல்லவர்ங்கிறதால நம்பர் 1ன்னா? துள்ளத் துடிக்க யூத்துக்காக இசையமைச்சாத்தான் முதலிடம் கிடைக்குமா? அப்போ வயசானவங்க, பெண்கள் எல்லாம் என்ன பாவம் பண்ணினாங்க? கிரியேட்டிவ்வான பாடல்கள், பாடல்களுக்காக ஓடிய படங்கள், ஆடியோ விற்பனைன்னு மொத்தமா பார்த்தா என் இசையின் ரீச்சே வேறே. ஜெமினி 'ஓ போடு' மாதிரி வேற எந்தப் பாட்டும் ஹிட்டானதில்லை. 'ஆட்டோகிராப்' மாதிரி எந்தப் பாடல்களும் ரசிகர்களை மதிமயங்க வைச்சதில்லை. முதல் படத்திலிருந்தே ஒரு சில இசையமைப்பாளர்களை இண்டஸ்ட்ரி தலையில் தூக்கி வைச்சுக் கொண்டாடுது. எனக்கு அந்தப் பாக்கியம் கிடைக்கலை, அவ்ளோதான். இன்னும் முதலிடத்துல இருக்கறதா சொல்லப்படற டைரக்டர், ஹீரோங்ககிட்ட நான் வேலை செய்யலை. நான் யார்கிட்டேயும் போய் கையேந்தி நிக்கமாட்டேன். இன்னைக்கு இருக்கிற தமிழ் சினிமா கலைஞர்களில் பெரும்பாலானவங்க வாரிசுக் கலைஞர்கள்தான். ஆனா நான் சுயம்பு. சிறிய



**– பரத்வாஜ் பகீர்**

படங்களுக்கு இசையமைத்தே ரசிகர்களைச் சென்றடைந்தவன் இந்த பரத்வாஜ்."

**சுதந்திரமாக இசையமைக்க திரையுலகம் வாய்ப்பளிக்கிறதா?**

"தமிழ் சினிமாவில் வெறும் பதினைந்து நிமிடங்கள் வரும் இசைக்குத்தான் எல்லோரும் ரொம்ப விசனப்படறாங்க. சினிமாவுல ஒரு ஸ்டண்ட் மாஸ்டருக்கோ, டான்ஸ் டைரக்டருக்கோ, ஆர்ட் டைரக்டருக்கோ யாரும் 'இப்படிச் செய்' 'அப்படிப் பண்ணு'ன்னு க்ளாஸ் எடுக்கிறதில்லை. ஆனா ஒரு இசையமைப்பாளன்தான் இங்கு எடுப்பார் கைப்பிள்ளை. ஹீரோ முதற்கொண்டு ஆளாளுக்கு இசையில மூக்கை நுழைக்கிறாங்க. அதேபோல் புதுமுகங்கள் வந்து குவியறதும் இந்தத் துறையில்தான். இங்கே கீபோர்டை வாசிக்கத் தெரிந்தால் போதும் இசையமைப்பாளனாயிடறாங்க. வீட்ல கம்ப்யூட்டர் இருந்தா அதுதான் ஸ்டூடியோவாம்! இங்கு இசையமைப்பாளருக்கு சம்பளமும் குறைவு. கோடிகள் எல்லாம் எங்களுக்குக் கனவுதான். அந்தக் கால பாட்டு மாதிரி இன்னைக்கு இல்லைன்னு ரசிகர்கள் குறைப்பட்டுக் கொள்வது எவ்வளவு வெட்கக்கேடு! எங்களோட கைகளைக் கட்டிப் போட்டதுதான் இந்நிலைமைக்குக் காரணம். என் பாட்டுகள்ல தமிழ் உச்சரிப்பு கெடாம பார்த்துக்குவேன். இதனால்தான் தமிழை மென்னு துப்பினாலும் குழந்தையா பாடறாருன்னு எல்லோரும் கொண்டாடுற உதித் நாராயணனை இதுவரைக்கும் கிட்ட சேர்க்கலை. அவர் தமிழ் நல்லா கத்துக்கிட்ட பிறகு என் இசையில் பாடட்டும்."

> **"அந்த சந்தோஷத்தை சேரன் பகிர்ந்துக்கலை. ஒரு போன்கூட பண்ணலை!"**

**காப்பியடிக்கிறார்கள் என்கிற குற்றச்சாட்டு பற்றி?**

"சினிமாவுல எதுதான் காப்பியில்லை. இங்கிலீஷ் படத்தை அப்படியே காப்பியடிச்சு 'அதிலிருந்து ஜஸ்ட் அழகான கதை முடிச்சுதான் கிடைச்சது, அப்படியே டெவலப் பண்ணினோம்'னு கூசாம பொய் சொல்ற இயக்குநர்கள் இல்லையா? கதையில ஆரம்பிச்சு டான்ஸ், லொகேஷன், ஸ்டைல் எல்லாமே இங்கே அப்பட்டமான காப்பிதானே. ஆனா கைநீட்டி குற்றம் சொல்றதும் நோகடிக்கிறதும் பாவப்பட்ட இசையமைப்பாளனைத்தான். சினிமாவுல கொஞ்சமாவது ஒரிஜினாலிட்டி இருக்குன்னா அது இசையில மட்டும்தான். ஊர்ல எவ்வளவு கச்சேரி குழுக்கள் இருக்கு. எல்லோராலும்

மியூசிக்போட முடியுமா? இசை என்பது தவம் மாதிரி. சும்மா காப்பியடிச்சு வர்றது கிடையாது."

**'ஆட்டோகிராப்' பாடல்கள் கன்னடத்திலேயும் ஹிட்டானது பற்றி?**

"இதை நான் என்னன்னு சொல்றது? ஒரு நாள் எனக்கு ஒரு போன் வந்துச்சு. மறுமுனையில, 'சார் நான் சுதீப் பேசறேன். ஆட்டோகிராப் படத்தோட கன்னட ரீமேக்கான 'மை ஆட்டோ கிராப்'போட ஹீரோ. படம் சூப்பர் ஹிட். பாடல்களும் அதைவிட ஹிட்டு'ன்னாரு. எனக்கு தூக்கிவாரிப் போட்டுச்சு. ஏன்னா ஆட்டோகிராப் பாடல்கள் கன்னடத்துக்குப் போனதே எனக்குத் தெரியாது. 'ஆட்டோகிராப்' தயாரிப்பாளர் சேரன் எனக்குத் தகவல் சொல்லாமலேயே அந்தப் படத்தோட பாடல்களை அப்படியே கன்னடத்திலும் பயன்படுத்தியிருக்காரு. ராயல்டியும் தரலை. இன்னொரு கொடுமை, தமிழ்ல பாடின அதே பாடகர்கள்தான் கன்னடத்திலேயும் பாடினாங்க. அவங்களும் இதை என்கிட்டேயிருந்து மறைச்சுட்டாங்க. சேரனும் இந்த உண்மையைச் சொல்லலை. இங்குள்ள இசையமைப்பாளர்களுக்கு இசை தெரிஞ்ச அளவுக்கு வியாபாரம் தெரியாது. அதனால எல்லோரும் விளையாடறாங்க. உலகம் முழுக்க, பாடல்களை இசையமைக்கிறவருக்குத் தான் அதற்குண்டான எல்லா உரிமைகளும் உண்டு. அங்கே ஒரு பாட்டு ஹிட்டாச்சுன்னா கோடிகள்ல புரள்வாங்க. சாகறவரைக்கும் ராயல்டி கிடைக்கும். இந்தியாவுல இசைத் துறையில புரொபஷனலிஸமே மருந்துக்கும் கிடையாது. எஃப்.எம். முதல் ரிங்டோன்ஸ் வரை எங்க உழைப்பை உறிஞ்சறவங்கதான் இங்கே அதிகம்."



**தேசிய விருது கிடைக்காத வருத்தம் நீங்கிவிட்டதா?**

"அதெப்படி? 'ஆட்டோகிராப்'புக்கான தேசிய விருது நூலிழையில மிஸ் ஆனதாச்சே. ஆனா 'ஒவ்வொரு பூக்களுமே' பாட்டுக்காக சித்ராவுக்கும் பா.விஜய்க்கும் தேசிய விருது கொடுத்திருக்காங்க... 20 வருஷமா கேட்காத சித்ரா குரலையா அதுல புதுசா கேட்டுட்டாங்க? பாடல் வரிகளை வெறுமனே பேப்பர்ல எழுதியிருந்தா ரசிச்சிருக்க முடியுமா? ஆட்டோகிராப் பாடல்களுக்காக விருதுகள் கிடைச்சிருந்தாலும் இயக்குநர் சேரன் அந்த சந்தோஷங்களை என்கிட்டே பகிர்ந்துக்கலை. ஒரு போன்கூட பண்ணலை."

**- ச.ந.கண்ணன்**

எல்லோரும் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஒரே சத்தம். சிறிது நேரம் கழிந்த பிறகு விளையாட்டுகள் முடிவடைகின்றன. குழந்தைகள் அறைக்குத் திரும்புகிறார்கள். சுவரில் ஒட்டகச்சிவிங்கி, யானை என்று பெரிது பெரிதாக வரையப்பட்டிருக்கின்றன. அருகே வரிசையாக கம்ப்யூட்டர்கள். வந்ததும் வராததுமாக ஒரு குட்டிப் பெண் தென்னை மரம், வானம், மீன் என்று க்ரேயான்ஸால் வரைந்து தள்ளிக் கொண்டிருக்கிறாள். ஒரு குதிரைவால் குட்டி கம்ப்யூட்டரில் எதையோ தட்டிக் கொண்டிருக்கிறது. கேட்டால் பள்ளிக்கூடம் என்கிறார்கள்.

பாண்டிச்சேரி மதர் ஸர்வீஸ் சொஸைட்டியால் நடத்தப்படும் இந்த அதிசயப் பள்ளி, சென்னை பெசன்ட் நகரில் உள்ளது. பெயர் ப்ரிம்ரோஸ். ஆறாவது வகுப்பு வரை பரீட்சை கிடையாது. 'நாளைக்கு வரும்போது இதெல்லாம் எழுதிட்டு வா. வரலேன்னா அவ்ளோதான்' என்று ஆசிரியர்கள் ஆட்காட்டி விரலை ஆட்டி மாணவர்களை இங்கு பயமுறுத்துவதில்லை.

வீட்டுப்பாடம் கிலோ என்ன விலை என்று கேட்கிறார்கள். வகுப்பறைகளில் தரும் புத்தகங்களை வகுப்பறைகளிலேயே விட்டுவிடலாம். வீட்டுக்குச் சுமந்து செல்ல வேண்டிய அவசியமில்லை. கையை வீசிக்கொண்டு ஜாலியாகப் பள்ளிக்குப் போகலாம்.

"ஏற்கெனவே பாண்டிச்சேரில எங்க ஸ்கூலுக்கு அமோக வரவேற்பு. அதனாலதான் சென்னையில தொடங்கியிருக்கோம். இது ஒரு சக்திவாய்ந்த மாற்றுக் கல்வி முறை" என்கிறார் இதன் நிர்வாகி தேவகன்னி.

வீட்டுப்பாடம், பரீட்சை, ட்யூஷன் எல்லாம் இருந்தாலே குழந்தைகள் படிக்க மாட்டேன் என்கிறார்கள். இவை எதுவொன்றும் இல்லை என்று ஆகிவிட்டால் மாணவர்கள் படிப்பார்களா? "நிச்சயம் படிப்பாங்க. ஏன்னா நாங்க அவங்களுக்கு எதையும் கட்டாயப்படுத்தி திணிக்கிறதில்லை. மனப்பாடம் செய்யச் சொல்லி அதை அப்படியே எழுத வைக்கிறதில்லை. அவங்களோட இயல்பான திறமைகளைக் கண்டுபிடிச்சு வளர்க்கறோம்'' என்கிறார் தேவகன்னி.




# ஹோம் வொர்க்குக்கு

வகுப்பறைகளில் என்ன மாதிரி பாடங்கள் எடுக்கிறார்கள்? ப்ளாஷ்கார்ட் என்று ஒரு முறை வைத்திருக்கிறார்கள். எல்.கே.ஜி. குழந்தைகளிடம் ஒரு அட்டையை நீட்டுகிறார்கள். படத்தில் ஒரு ஆப்பிள் பளபளக்கிறது. அந்தப் படம் குழந்தைகளின் நினைவில் அழுத்தமாகப் பதிந்துபோன பிறகு அந்த அட்டையைப் பின்புறமாகத் திருப்புகிறார்கள். 'ஏ ஃபார் ஆப்பிள்' என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆப்பிளை வைத்து ஆசிரியர் ஏதாவது

# டாட்டா!

கதை சொல்கிறார். ரைம்ஸ் பாடுகிறார். குழந்தைகள் கையைக் காலை உதைத்துக் கொண்டு ஆடுகிறார்கள். விளையாட்டோடு விளையாட்டாக ஆப்பிள் அவர்களுக்கு அறிமுகமாகிவிடுகிறது. அது மட்டுமா? ஆப்பிள் என்ன நிறம், ஆப்பிள் மரத்தில் காய்க்குமா, செடியில் காய்க்குமா, ஆப்பிள் சாப்பிட்டால் உடம்புக்கு நல்லதா போன்ற விஷயங்கள் தெரிந்துவிடுகின்றன. அப்படியே சிறிது சிறிதாகப் பாடங்கள் விரிவடைகின்றன. நியூட்டன் தலையில் ஆப்பிள் தொப்பென்று விழுந்த கதை அறிமுகப்படுத்தப் படுகிறது. நியூட்டன் யார் என்று தனியாக ஒரு பொம்மையைக் காட்டுகிறார்கள். இப்படி ஒவ்வொன்றும் காட்சி ரூபமாக மிக அழுத்தமாகக் கற்பிக்கப் படுகின்றன.

ஓவியம், சிற்ப வேலை, கராத்தே, இந்தி, பிரெஞ்சு என்று பலதும் கற்றுக் கொடுக்கிறார்கள். கூடுதலாக ஒரு ஐரோப்பிய மொழியையும் தெரிந்துகொள்ளலாம். அறிவியல் படிக்கிறோம் என்று தெரியாமலேயே குழந்தைகள் அறிவியல் படிக்கிறார்கள். ஜாலியாக விளையாடுகிறோம் என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கும்போதே அல்ஜீப்ராவையும், ஆப்பிரிக்க வரலாறையும் கற்றுக் கொண்டுவிடுகிறார்கள்.

இப்பள்ளியின் அகடமிக் டைரக்டர் லெஸ்லீ ஜேக்கப், உலகெங்கிலுமுள்ள சர்வதேச பள்ளிக் கூடங்களில் பயன்படுத்தப்படும் சிறந்த யுக்திகளில் பலவற்றை இப்பள்ளியில் மேற்கொண்டு வருகிறாராம். ஆசிரியர்களுக்கும் அவ்வப்போது புதுப்புது பயிற்சி தருகிறார்களாம்.

"குட்டிப் பசங்க கேட்கிற கேள்விகளைப் பார்த்து எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்கு. அழகழகா யோசிக்கிறாங்க, நாம கஷ்டம்னு நினைச்சிக்கிட்டு இருக்கிற விஷயத்தைக்கூட ரொம்ப ஈஸியா கத்துக்கிறாங்க'' என்கிறார் ஆசிரியர் வித்யா. 'எனக்கே தெரியாத பல விஷயங்கள் எங்க குட்டீஸுக்குத் தெரிஞ்சிருக்கு. இரண்டாவது, மூணாவது வகுப்பிலேயே எழுத்துப் பிழை இல்லாம எழுதறாங்க..'' என்று அதிசயிக்கிறார் ஆசிரியை ஆனி. ''ஞாயிற்றுக் கிழமைகளில் கூட வகுப்பறைக்குப் போக வேண்டும் என்று வீட்டில் அடம் பிடிக்கிற குழந்தைகளை இங்கே மட்டும்தான் பார்க்க முடியும்'' என்று பெருமைபொங்க சொல்கிறார் மற்றொரு ஆசிரியை கிட்டி.





- மருதன்

தமிழக ஐந்து மண்டல தேர்தல் நிலவரங்களை வெளியிட்டு அசத்திட்டீங்க தலைவா...!
**சென்னை - 82, சி.பரத்**

கலவரத்துக்குத் தயாராக இருக்கும்

'மெட்டி ஒலி' போல் இல்லையென்பதற்காக 'செல்வி'யைக் குறைகூற வேண்டாம் 'போஸ்' வெங்கட்!
**மதுரை - 9, இரா.கல்யாணசுந்தரம்**

கோடையில் ஏற்படும் தலைவலிக்கு தக்க தருணத்தில் தீர்வு கொடுத்தமைக்கு நன்றி.
**சென்னை - 4, ஆர்.விஸ்வநாதன்**




விஜயகாந்த்தை கற்பனை பேட்டி எடுத்த விவேக், கண்களில் நீர் வரும்வரை சிரிக்க வைத்துவிட்டார்!
**வேலூர், வெ.ராம்குமார்**

பணத்தையும் புகழையும் கொடுத்து, ஏணியாகப் பயன்பட்ட அரட்டை அரங்கத்தை விட்டு விசு சென்றது முறையற்றது.
**மதுரை - 7, இரா.சக்கரபாணி**

புரிஞ்சுதா? புரியலியா? அமரர் கல்கி ஜோராய் புரிய வச்சுட்டார்.
**சென்னை - 73, கே.பி.ராமன்**

# பரம திருப்தி!

குஜராத்தில் ஆட்சியாளர்கள் முன்யோசனையுடன், சம்பந்தப்பட்டவர்களுடன் கலந்து பேசி நிதானமாகச் செயல்பட்டால் வகுப்பு மோதலைத் தவிர்க்கலாம்.
**தூத்துக்குடி, அ.அப்துல் காதர்**

சாதிக்க வேண்டும் என்ற முனைப்பு பேரரசின் பேட்டியில் தெரிந்தது.
**மேலகிருஷ்ணன் புதூர், பிரபாலிங்கேஷ்**

'பத்து ரூபாய் பந்தம்' சிறுகதை மனதிற்கு பரம திருப்தியைத் தந்தது!
**மதுரை - 9, வஸந்தா பரமசிவம்.**

வட்டமேஜை

# அதுதான் காரணம்!

இந்திய அரசியல் வரலாற்றில் இது வரை இல்லாத சாதனை மேற்கு வங்காளத்தில் நிகழ்த்தப்பட்டுள்ளது. ஏழாவது முறையாக அங்கே தேர்தலில் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியுள்ளது இடதுசாரிக் கூட்டணி. புத்ததேவ் பட்டாச்சார்யா மறுபடியும் முதல்வராகியுள்ளார். மீண்டும், மீண்டும் மேற்கு வங்காள மக்கள் மார்க்சிஸ்ட் தலைமையிலான இடதுசாரிக் கூட்டணிக்கே ஏன் வாக்களிக்கிறார்கள்? தமிழ்நாட்டு மார்க்சிஸ்ட் கட்சிப் பிரமுகரும், தொழிற்சங்கத் தலைவருமான டி.கே.ரங்கராஜன் இதற்கான காரணங்களை நம்மிடம் விளக்கினார்.

“பொதுவாக வங்காளிகள், எளிமையை விரும்புபவர்கள். இடதுசாரி அரசியல்வாதிகள் அனைவருமே மிகவும் எளிமையானவர்கள். வங்கமொழியின் மீதும் வங்காள கலாசாரத்தின் மீதும் ஆழ்ந்த பற்றுக்கொண்ட மக்களின் உணர்வுகளை, அரசியலுக்காக இல்லாமல், உணர்வுபூர்வமாக மதித்து, பாதுகாப்பதை தங்கள் கடமையாகவே செய்து வருகிறது இடதுசாரிக் கூட்டணி.

விவசாயத்துக்கு அதிக முக்கியத்துவம் தருவதை இடதுசாரிகள் கொள்கையாகக் கடைப்பிடித்தனர். மே.வங்காளத்தில் விவசாயத்துக்கு இலவச மின்சாரம் கிடையாது. மின் கட்டணம் செலுத்தும்படி விவசாயிகள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தியிருக்கிறது அரசாங்கம்.

வோட்டுக்காக என்றில்லாமல் மாநில மக்கள் மேம்பாட்டுக்காக திட்டங்கள் அங்கே தீட்டப்படுகின்றன. நிதி நெருக்கடியைச் சந்திக்கிறபோது, சிக்கனத்தைக் கடைப்பிடிக்கிறது அரசு. சென்னையில் ஒரு கோடி ரூபாய் செலவில் மேற்கு வங்க அரசு இடம் வாங்கி, ஒரு அலுவலகம் கட்ட திட்டமிட்டிருந்தது. நிதி நெருக்கடி ஏற்பட்டதன் காரணமாக அந்தத் திட்டம் கைவிடப்பட்டது.

விலைவாசி உயர்வு, வகுப்புவாதப் பிரச்னை, அகதிகள் பிரச்னை, மொழிப் பிரச்னை என்று எதுவானாலும் பிரச்னையை மக்களுக்குப் புரிய வைத்து மக்கள், அரசு ஆகிய இருதரப்பும் பரஸ்பரம் ஆதரவாக இருக்கும்படி பார்த்துக் கொள்ளப்படுகிறது.

இவற்றைவிட மிக முக்கியமான காரணம், பஞ்சாயத்துத் தேர்தல்களை முறைப்படி நடத்தி, கிராமங்களுக்கு அதிகாரங்களையும் மாநில வருவாயில் ஐம்பது சதவிதம் வரையும் பகிர்ந்தளிப்பது.

இடதுசாரி கூட்டணிக்கு மாற்றாக பலமான வேறு கட்சிகள் அங்கு இல்லை என்பதும் ஒரு முக்கியக் காரணம்.”



• புத்ததேவ் பட்டாச்சார்யா

- எஸ்.சந்திரமௌலி

**ஆரணி யுவராஜ்**

“விஜயா! முருங்கைக் கீரை ஒரு கட்டு அஞ்சு ரூபாய்னு சொல்றாங்க. வேண்டாம்னு வந்துட்டேன்” என்றபடி கையில் காய்கறிப் பையுடன் நுழைந்தார் கிருஷ்ணராஜ்.

ஹாலின் மையமாக நாற்காலியில் அமர்ந்திருந்த வினோத், “என்ன அண்ணே! இன்னிக்கும் பேரம் பேசி யார்கிட்டேயாவது சண்டை போட்டீங்களா?” என்று சிரிப்புடன் கேட்டான்.

“விஜயா! சார் யாரு?” என்று கேட்டார் கிருஷ்ணராஜ்.

“அதுதாங்க எனக்கும் தெரியலை. நம்ம பேரை எல்லாம் சரியாச் சொன்னாரு. அதனாலதான் உட்கார வெச்சு காபி கொடுத்தேன்” என்றாள் விஜயா.

“என்னக்கா நீங்களும் இவரோடு சேர்ந்துக்கிட்டு...? அதான் சொல்றேனே... வரணும்னுதான் ஆசை. முடியலை. அவ்வளவு வேலை. கோவிச்சுக்காதீங்க” என்றான் வினோத்.

கிருஷ்ணராஜ் சிரித்தார். பையை விஜயாவிடம் கொடுத்துவிட்டு இன்னொரு நாற்காலியை இழுத்து வினோத் அருகே போட்டுக் கொண்டார்.

“சும்மா சொன்னேன் வினோத். நான் போய் கோவிச்சுப்பேனா? எங்கே ராஜேஷ்? ஷூட்டிங் எல்லாம் முடிஞ்சுதா?” என்று கேட்டார்.

“எல்லாம் முடிஞ்சுதுண்ணே. படம் சென்சாருக்குப் போய் வந்துடுச்சி. அடுத்த வெள்ளிக்கிழமை ரிலீஸ். நாளைக்கு ஈவ்னிங் ப்ரிவ்யூ ஷோ. அதுக்காக உங்களுக்குன்னு நாலு டிக்கெட் கொண்டு வந்திருக்கேன். ராஜேஷே வரணும்னுதான் இருந்தான். புரொடியூசர் கூப்பிட்டு ‘சில வி.ஐ.பிக்களைக் கூப்பிடப் போகணும். நீயும் வா... யூஸ்ஃபுல்லா இருக்கும்’னு சொன்னார். அதனால என்னை அனுப்பினான். தப்பா எடுத்துக்காம வரணும்னு சொன்னான்” என்றான் வினோத்.



“அட போப்பா! இதுல தப்பா நினைக்க என்ன இருக்கு? படம் எப்படி வந்திருக்கு. அதைச் சொல்லு” என்றார்.

“ரொம்ப நல்லா வந்திருக்குண்ணே. கண்டிப்பா நூறு நாளைக்கு மேலே ஓடும்.”

“அப்போ ராஜேஷ் பெரிய ஆளாயிட்டான்னு சொல்லு. என்னங்க... நாளைக்குப் படம் பார்க்கப் போறப்பவே ராஜேஷைப் பார்த்துப் பேசிடணும். அப்புறம் அந்த சாரை பார்க்கவோ, பேசவோ முடியாமப் போயிடலாம்” என்றாள் விஜயா.

“கரெக்ட்! அப்படியே இந்த சார்கிட்டேயும் பேச வேண்டியதை எல்லாம் பேசிடுவோம். நம்ம ராஜேஷோட அடுத்த ஹீரோவாச்சே” என்றார் கிருஷ்ணராஜ்.

“அண்ணே! நான் எவ்வளவு பெரிய ஹீரோவானாலும் உங்க ரெண்டு பேரையும் கடைசி வரைக்கும் மறக்க மாட்டேன்” என்றான் வினோத்.

“சரி! சரி! நீ இன்னும் எத்தனை



# ஹீரோ!

இடங்களுக்குப் போகணுமோ? எங்க பேச்சால டயம் வேஸ்ட்டாக வேண்டாம். கிளம்பு வினோத்" என்றார் கிருஷ்ணராஜ்.

வினோத் எழுந்து கொண்டான். "ரெண்டு பேரும் கண்டிப்பா வரணும்" என்றவன் புறப்பட்டான்.

"பசங்க சொன்ன மாதிரியே ஜெயிச்சுட்டாங்க இல்லீங்களா?" என்று கேட்டாள் விஜயா.

"அவசரப்படாதே. படம் ரிலீஸான பின்னாடிதான் தெரியும். இப்போதைக்கு பாதிக் கிணறுதான் தாண்டியிருக்காங்க" என்றார் கிருஷ்ணராஜ்.

கிருஷ்ணராஜுக்கும் விஜயாவுக்கும் இரண்டு பெண் வாரிசுகள். இருவரையும் திருமணம் செய்து கொடுத்து விட்டதால் இப்போது இவர்கள் மட்டுமே இந்த வீட்டில். பள்ளி விடுமுறை நாட்களில் வீடு, மகள்கள் மற்றும் பேரக் குழந்தைகளின் உபயத்தால் கலகலக்கும். மற்ற சமயங்களில் வெறிச்சிட்டு இருக்கும்.

அந்த வெறுமையை ஓரளவுக்குப் போக்கும் எண்ணத்துடன்தான் மொட்டை மாடியில் ஓய்வுக்காகக் கட்டிய அறையை வாடகைக்கு விட்டார்.

இரண்டு, மூன்று முறை ஆட்கள் மாறிய பிறகு நான்காவதாக வந்து சேர்ந்தவர்கள்தான் ராஜேஷ் மற்றும் வினோத். இருவரும் கோடம்பாக்கத்து சினிமா சிம்மாசனங்களில் அமரும் எண்ணத்துடன் கனவுகளைச் சுமந்து கொண்டிருப்பவர்கள். இதில் ராஜேஷுக்கு இயக்குநர் கனவு. வினோத்துக்கு நாயகன் கனவு.

வாடகை வருவதில் முன்னும் பின்னும் இருந்தாலும் நடவடிக்கைகள் நல்லவிதமாக இருந்தது. நாளடைவில் வீட்டுப் பிள்ளைகளாகவே மாறி விட்டார்கள். தங்களது கனவுகளை, லட்சியங்களை மனம் விட்டுப் பேசுவார்கள். அவர்களின் திறமையை கிருஷ்ணராஜால் உணர்ந்து கொள்ள முடிந்தது. நிச்சயம் சாதிப்பார்கள் என்று நம்பினார்.

சில சமயங்களில் அவர்கள் சோர்ந்து விடுவதுண்டு. அப்போது கிருஷ்ணராஜ்தான் ஆறுதலாகப் பேசி நம்பிக்கையூட்டுவார். குறிப்பாக வினோத் அடிக்கடி விரக்தியடைந்து விடுவான்.

"ராஜேஷ் நிலைமையாவது பரவாயில்லைண்ணே. எப்பவாவது டைரக்டராக சான்ஸ் இருக்குன்னு நம்பலாம். என்னோட நிலைமைதான் மோசம். பைத்தியக்காரத்தனமா இங்கே இருக்கோமோன்னு நினைக்கிறேன்" என்பான்.

"ஏன் வினோத் அப்படிச் சொல்றே?" என்று கேட்பார் கிருஷ்ணராஜ்.

"பின்னே என்ன? இப்பல்லாம் வெளியே இருந்து ஹீரோக்கள் எங்கே வர்றாங்க? எனக்குத் தெரிஞ்சு அஜித்தோடு அது முடிஞ்சு போச்சு. எல்லாம் டைரக்டர்களோட பிள்ளைங்க, தம்பிங்க, தயாரிப்பாளர்களோட பிள்ளைங்க, முன்னாள் கதாநாயகர்களோட பிள்ளைங்கன்னு வாரிசுமயமாத்தானே இருக்கு? என்னை மாதிரி எத்தனையோ பேர் திறமையை வெச்சுக்கிட்டு கால் வலிக்கக் காத்திருக்கோம். யார் கண்ணுக்கும் படறதில்லை" என்பான்.

"டேய் வினோத், கவலைப்படாதேடா. நான் இருக்கேன். நான் டைரக்டர் ஆனதும் உன்னை நிச்சயமா ஹீரோவாக்கிக் காட்டறேன்" என்பான் ராஜேஷ்.

வினோத்திடமிருந்து மெல்லிய சிரிப்பு வெளிப்படும். "இப்படித்தான் திவாகரும் சொல்லிட்டு இருந்தான். இப்ப என் பேரையே மறந்துட்டான். இப்ப அவன் எடுத்துட்டு இருக்கிற படத்துல ஹீரோ யார் தெரியுமா? நடிகை காவ்யாவோட லவ்வராம். நேத்து ஷூட்டிங் பார்த்தேன். காதலிக்கறவகிட்ட காதலைச் சொல்றவன். முகத்தைப் பார்க்கணுமே? கீரைக்காரிட்டே பேரம் பேசற மாதிரி... இத்தனைக்கும் எதிர்ல இருக்கறவ நிஜமான காதலி."

"வினோத் அந்த திவாகரும், நானும் ஒண்ணா?"

"அதானே? நம்பிக்கையோடு இரு வினோத். ஏன் ராஜேஷ், முன்னாடி இருந்த டைரக்டர்ஸ் எத்தனையோ ஹீரோக்களை அறிமுகம் செய்தாங்க. ஆனா இப்ப இருக்கிற உன்னை மாதிரி இளம் டைரக்டர்ஸ்தான் அதைச் சுத்தமா மறந்துட்டீங்க. கரெக்ட்டா?" என்று கேட்டாள் விஜயா.

"அப்படிச் சொல்ல முடியாதுக்கா. எங்களுக்கு வாய்ப்பைக் கொடுக்கறவங்க போடற நிபந்தனையை ஏத்துக்க வேண்டியதா இருக்கு. எப்படியாவது திறமையை நிரூபிச்சு எங்களுக்குன்னு ஒரு இடத்தைப் பிடிக்க அவங்க சொல்ற மாதிரி செய்ய வேண்டியிருக்கு" என்றான் ராஜேஷ்.

"சரி... திறமையை நிரூபிச்சு ஜெயிச்சுட்டீங்க. அதுக்கு அப்புறமும் அப்படியே தானே செய்யறீங்க? படம் பெரிய ஹிட்டாயிட்டா பெரிய ஹீரோவை வெச்சு எடுக்கறீங்க. இல்லைன்னா அந்த பெரிய ஹீரோக்களோட கால்ஷீட் கிடைக்கலைன்னு நீங்களே மேக்கப் போட்டுக்கிட்டு இறங்கிடறீங்க" என்றார் கிருஷ்ணராஜ்.

"மத்தவங்களைப் பத்தி நான் எதுவும் சொல்ல விரும்பலை. நான் அப்படி இருக்க மாட்டேன்" என்றான் ராஜேஷ்.

அவனுக்கு இயக்குநராகும் வாய்ப்பு வந்தது. கதாநாயகன் தற்சமயம் வெற்றிகளைத் தந்து கொண்டிருக்கும் ஒருவர். படத்தின் பூஜைக்கு கிருஷ்ணராஜ் சென்றார்.

"முதல் படம்ணே. அதுதான் புரொடியூசர் சொல்றபடி செய்ய வேண்டியிருக்கு. அப்படியும் வினோத்துக்கு படத்துல ஒரு ரோல் கொடுக்கறேன். அடுத்த படத்துல அவனை மெயின் ஹீரோவாக்கிக் காட்டறேன்" என்றான் ராஜேஷ்.

"சந்தோஷம்பா" என்று புன்னகையுடன் தட்டிக் கொடுத்தார்.

வினோத் ராஜேஷுக்கு உதவியாக எந்நேரமும் அவனுடனே இருந்தான். வெளிப்புற படப்பிடிப்பு. உள்ளூரில் இருந்தால் ஸ்டூடியோவில் வேலை என அவர்கள் அறைக்கு வருவதே நின்று போனது. இப்போதும் மொட்டை மாடி அறை பூட்டிதான் இருக்கிறது.

"பிரமாதம் ராஜேஷ். படம் சூப்பரா இருக்கு. கண்டிப்பா ஹிட்டுதான்."

"நம் காலனியில் நடைபெற்ற கோலப் போட்டியில் பரிசு பெற்றோர் விவரம்... முதலிடம் திரு. சிவசங்கரன், இரண்டாமிடம் திரு. வீரமணி, மூன்றாமிடம் திரு. கோபாலகிருஷ்ணன், நான்காமிடம் திருமதி. சுசிலா!"

– அ. ஜெயேந்திரன்

இந்த வார்த்தையைச் சொல்வதற்காக மனைவியுடன் கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் காத்திருந்தார் கிருஷ்ணராஜ். காரணம், படம் பார்த்துவிட்டு வெளிப்பட்ட வி.ஐ.பிக்கள் வரிசையாக அவன் கையைக் குலுக்கிப் பாராட்டிக் கொண்டிருந்ததால் இவர்கள் ஒதுங்கி நின்றார்கள். ஒரு வழியாக இப்போதுதான் நெருங்க முடிந்தது.

"தேங்க்ஸ்ணே" என்றான் ராஜேஷ்.

"அப்புறம் என்னப்பா பெரிய ஆளாயிட்டே. கார், பங்களான்னு வாங்கிடுவே. இனிமே எங்க மொட்டை மாடி ரூம் எதுக்கு? சாவியைக் கொடுத்துடேன்" என்றாள் விஜயா.

சிரித்தான். "அப்படியே பங்களா வாங்கினாலும் என்ன? அது ஆபீஸா இருக்கட்டும்" என்றான்.

"எலி வலை மாதிரி இருக்கு. அதையா ஆபீஸா வெச்சுப்பே?"

"சரி; ஒரு அடையாளமா இருக்கட்டுமே" என்றான்.

ஆனால் அடுத்த மாதமே சாவி வந்து சேர்ந்து விட்டது. அந்தப் படம் வெளியாகி கண்டபடி ஓட ஆரம்பித்து இருந்தது. பத்திரிகைகளிலும், தொலைக் காட்சிகளிலும் அவனது வெற்றி முகம். அடுத்த படம் குறித்து ஏதேதோ செய்திகள்.

"என்ன வினோத், உன்னோட முகம் எப்போ இந்த மாதிரி வரப் போகுது?" என்று கேட்டாள் விஜயா.

"தெரியலைக்கா" என்றான்.

"என்ன வினோத் தெரியலைங்கறே. ராஜேஷ் அடுத்த படத்தை இன்னும் ஆரம்பிக்கலையா?" என்று கேட்டார் கிருஷ்ணராஜ்.

"அடுத்த வாரம் பூஜை" என்றான்.

"அப்புறம் என்ன?"

"என்னவா? ஹீரோ நான் இல்லையே."

"வேற யாரு?" என்று கேட்டார் கிருஷ்ணராஜ்.

தொலைக்காட்சி ஓடிக் கொண்டிருந்தது. ஒரு சினிமா படப் பூஜையின் காட்சிகள். அது முடிந்ததும் அரும்பு மீசை முளைத்துக் கொண்டிருந்த அவன் கேமராவைப் பார்த்து வெட்கம் கலந்த புன்னகையுடன் பேசினான்.



"ஹாய்! என்பேரு சஞ்சீவ். என்னை உங்களுக்குத் தெரியாது. ஆனா என்னோட அண்ணனையும், அப்பாவையும் கண்டிப்பாகத் தெரியும். முன்னாள் கதாநாயகன் பரத்குமார்தான் என்னோட அப்பா. இப்ப ஹீரோவா கலக்கற முகில் தான் என்னோட அண்ணன். இந்த 'மை டியர் திருடா' படம் மூலமா நான் அறிமுகமாகறேன். இதோட டைரக்டர் ராஜேஷை உங்களுக்கு நல்லாவே தெரியும். அவர் ஒரு நாள் வீட்டுக்கு வந்தார். அண்ணனைப் பார்க்கத்தான் வந்திருப்பாருன்னு நினைச்சேன். ஆனா 'உன்னைப் பார்க்கத்தான் வந்தேன். என் அடுத்த படத்தோட ஹீரோ நீதான்'னு சொன்னதும் ஷாக். ஏன்னா வீட்டுல ரெண்டு ஹீரோக்கள் இருக்கறப்பவும் எனக்கு சினிமாவுல நடிக்கணும்ங்கற எண்ணம் வந்ததே இல்லை. சாஃப்ட்வேர் பிஸினஸ்மேன் ஆகணும்ங்கற எய்ம்ல இருந்தேன். ஆனா ராஜேஷ் சார்தான் இந்தப் படத்துல நீ நடிச்சே ஆகணும்னு சொல்லிட்டார். ஸோ... இப்ப உங்க முன்னாடி பேசிட்டு இருக்கேன். அப்பாவையும், அண்ணனையும் ஏத்துக் கிட்ட நீங்க என்னையும் ஏத்துப்பீங்கன்னு நம்பறேன்."

அவன் பக்கத்தில் புன்னகையுடன் நின்றிருந்தான் ராஜேஷ்.



• ஜாதி கடந்த சக்தி!



• அரசியல் ஜாதி!



• ஜாதி அரசியல்!

● த. சத்தியநாராயணன், அயன்புரம்

? ஜெ. இனி என்ன செய்ய வேண்டும்?

! தனிப்பட்ட விரோதங்களை மறந்து, கண்ணியமற்ற சொற்களைப் பயன்படுத்தாமல் அர்த்தமுள்ள எதிர்கட்சியாக அ.தி.மு.க. செயல்பட வழிகாட்ட வேண்டும்.

● ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி - 8

? வன்னியர் கணிசமாக உள்ள விருத்தாசலம் தொகுதியில் விஜயகாந்த் ஜெயித்துள்ளது குறித்து...?

! சினிமா ஆளுமை, ஜாதிகளைக் கடந்த சக்தி. இதையே வேறு விதமாக - ஜாதி ஆளுமையை (வேற்றுமையை) முறியடிக்கும் சக்தியாக அவர் விளங்க விரும்புகிறார் என்பதாகவும் சொல்லலாம்.

● நெ. பிரஜோற்பத்திகலை, புவனகிரி

? டி.ஐ.ஜி சிவனாண்டி திடீர் மாற்றம்; தேர்தல் ஆணையம் எடுத்த அதிரடி நடவடிக்கை குறித்து?

! தேர்தல் ஆணையம் கருத்துடன், சரியாகச் செயல்பட்டது. அதைத் தொடர்ந்து அவருக்கு அளிக்கப்பட்ட ஐ.பி.எஸ் அந்தஸ்தை ரத்து செய்து பதவி இறக்கம் செய்துள்ளது மத்திய நிர்வாகத் தீர்ப்பாயம். 'ஜெ'வின் மத்தளமாகச் செயல்பட முற்பட்டவருக்கு, இரண்டு பக்கமும் இடி!

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? 'அமெரிக்க அதிபருக்கு அடிமையாகிவிட்ட முஷாரஃப்பைத் தீர்த்துக் கட்டுங்கள்' என்று பின்லேடன் துண்டுப் பிரசுரம் வெளியிட்டுள்ளாராமே?

! பாகிஸ்தானின் சர்வாதிகாரி, அமெரிக்க சர்வாதிகாரத்துக்கு அடிமை என்பது உண்மைதான் என்றாலும் அவரைத் 'தீர்த்துக் கட்டுவது' தவறு. நேபாளத்தில் நடந்தது போல மக்கள் கிளர்ந்தெழுந்து, பாகிஸ்தானில் மெய்யான ஜனநாயகம் உருவாக வழிவகுக்க வேண்டும். பின்லேடன் காட்டும் அராஜக வழி மேலும் அராஜகத்தையே வளர்க்கும்.

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

? கடந்த ஐந்தாண்டுகள் அமைச்சராக இருந்தபோது 'துன்பத்தமிழனாக' இருந்தேன். இப்போதுதான் 'இன்பத் தமிழனாக' நிம்மதியாக இருக்கிறேன் என்று தி.மு.கவில் சேர்ந்த இன்பத் தமிழன் கூறியுள்ளது...?

! நம்பத்தகுந்த தமிழனாக அவர் இல்லை என்பதையே உணர்த்துகிறது.

● எல்.மாறன், மேல்பட்டி

? 'உயர்ஜாதி தகப்பனுக்கு ஸ்டாலின் பிறக்காமல் போய்விட்டதுதான் அவருடைய குற்றம்' என்று கருணாநிதி ஒரு பேட்டியில் சொல்லியிருப்பது குறித்து...?

! இன்றுள்ள ஒரே உயர்ஜாதி அரசியல்வாதி ஜாதிதான். மற்ற அனைவரும் தாழ்த்தப்பட்டவர்களே - டாடா - பிர்லாக்கள் உட்பட!

● பி.இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு

? தேர்தலில் வாக்களிக்காதது ஏன்

☐ ரூ.100/- பரிசு பெறுபவர்:
வே. சித்ரா,
12, வி.எம். இரண்டாம் தெரு,
சாந்தி ஸ்டோர் பின்புறம்,
கும்மிடிப்பூண்டி - 601 201

• ரூ.50/- பரிசு பெறுபவர்:
இரா. சாந்தகுமார்,
13/2, நாகமணி தெரு,
சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை - 600 002


• இரண்டு பக்க இடி!


• தகாத தமிழன்!

என்று கேட்டதற்கு, "என்னுடைய ஒரு வாக்கால் பெருத்த மாற்றம் ஏற்படப் போவதில்லை" என்று தலைமை தேர்தல் ஆணையர் கூறலாமா?

! நரேஷ் குப்தா சொன்னது போல் ஒவ்வொருவரும் நினைக்க ஆரம்பித்தால் ஜனநாயகம் என்ன ஆகும்! யார் வெற்றி பெறுகிறார்கள் என்பதல்ல முக்கியம். நமது ஜனநாயக கடமையைச் செய்தோமா என்பதுதான்! நரேஷ் குப்தா இப்படிப் பேசியிருக்கக் கூடாது. யானைக்கும் அடி சறுக்கும்.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

? குறைந்தபட்ச பொதுத் திட்டம் உருவாக்க கருணாநிதியிடம் வீரப்ப மொய்லி யோசனை கூறியுள்ளாரே?

! கண் இழந்தபின் சூரிய நமஸ்காரம் செய்கிறார். மைனாரிட்டி தி.மு.க. ஆட்சி அமைய உதவிய பிறகு குறைந்தபட்ச பொதுத் திட்டமாவது மண்ணாங்கட்டியாவது!

● வே. சித்ரா, கும்மிடிப்பூண்டி. ☐

? தே.மு.தி.க. 8.4 சதவிகித வோட்டுகள் பெற்றுள்ளது எதைக் காட்டுகிறது?

! 1. தே.மு.தி.கவுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்பதை. 2. தி.மு.க.- அ.தி.மு.க. மாறி மாறி நடத்தி வரும் ஆட்சிகளில் தமிழகத்தின் 8.4. சதவிகிதம் மக்கள் (குறைந்த பட்சமாக) அதிருப்தி அடைந்துள்ளனர் என்பதை. 3. தக்க முறையில் கூட்டணி மாறி அமைந்தால், மூன்றாவது அணி ஆட்சிக்கு வர முடியும் என்பதை.

● இரா.சாந்தகுமார், சென்னை - 2 ✱

? பதவியேற்ற அன்றே மூன்று வாக்குறுதிகளை கலைஞர் நிறைவேற்றியுள்ளாரே...?

! நிதி நிர்வாகத்தை அன்பழகன் தலையில் கட்டிவிட்டாரே, வள்ளல் பெருமான்!

● ஜி.நீலா, சென்னை - 4

? சுனாமியால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஜெயலலிதா செய்த உதவிகளை மறுக்க / மறக்க முடியாது என்பது போல் அவரது சென்னை வெற்றிகள் அமைந்துள்ளது குறித்து...?

! வெள்ளத்தாலும் சுனாமியாலும் சென்னை மக்கள் மட்டுமா பாதிக்கப்பட்டார்கள்? தமிழகம் முழுவதும் பாதிக்கப்பட்டதே! நிவாரணப் பணிகளின்போது மக்கள் நெரிசலில் சிக்குண்டு இறந்ததும் சென்னையில் தானே! தலைநகரில் தி.மு.கவுக்கு ஆதரவு குறைகிறது. அது அதிமுக வோட்டுகளாக மாறுகிறது என்பதே உண்மை.

• அர்த்தமுள்ள பொறுப்பு

# விஜயகாந்த் பெற்ற 8.4% எதைக் காட்டுகிறது..?

# அடுக்குமாடி அபாயம்!

சென்னையை மட்டுமல்ல ஒட்டு மொத்த தமிழகத்தையும் அதிர்ச்சியில் உறைய வைத்த சம்பவம் அது. அனிதா என்கிற இருபது வயது இளம்பெண், தான் வசிக்கும் அடுக்குமாடிக் குடியிருப்பில், பட்டப்பகலில் கத்தியால் குத்திக் கொலை செய்யப்பட்டார். பணத்தைக் கொள்ளையடிக்கும் முயற்சியில் நடந்த இந்தக் கொலைச் சம்பவத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட நிமிடத்தில் இருந்து அடுக்குமாடி குடியிருப்புவாசிகள் வயிற்றில் நெருப்பைக் கட்டாத குறைதான். தங்களது பாதுகாப்பு குறித்து பெரிதும் கவலைகொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள்.



• ராஜ்குமார்

இப்போது எல்லா அடுக்குமாடி குடியிருப்புகளிலும் நலச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டு, பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஒரு சிலர் தங்கள் வீட்டிலிருக்கும் இளைஞர்களை வைத்து ஃப்ரெண்ட்ஸ் ஆஃப் போலீஸ் என்கிற பெயரில் இரவு நேர காவல் பணியில் ஈடுபடுகின்றனர். இதுபோன்ற அசோசியேஷன் ஒன்றின் நிர்வாகியான ராஜ்குமார் என்பவரிடம் பேச்சுக் கொடுத்தோம்.

• கன்னியப்பன்



"பாதுகாப்புங்கறதை ரெண்டு வகையில பண்ண முடியும். ஒண்ணு நம்ம அபார்ட்மெண்டுக்காக தனியா செக்யூரிட்டி ஏற்பாடு செய்யறது. இன்னொண்ணு பில்டிங்ல வசிக்கிற ஒவ்வொருத்தரும் மத்தவங்க கூட நல்ல பழக்கத்தை உருவாக்கறது. இதைத்தான் அசோஸியேஷன்கள் செய்யுது. எல்லா அபார்ட்மெண்ட்லயும் செக்யூரிட்டி போடறாங்க. ஆனா பல பேர் சம்பளம் குறைவா கொடுத்தா போதும்னு ரொம்ப வயசானவங்களை வைச்சுடறாங்க. இதனால் திருட்டு, கொலை மாதிரி ஆபத்தான சம்பவங்கள் நடக்கும்போது அதை அவங்களால தடுக்க முடியாமப் போயிடுது. நம்ம ஃப்ளாட்ல ஏதும் பிரச்னை, ஆபத்துன்னு தகவல் சொன்னால், அடுத்த நொடி நம்ம வீட்டுக்கு அக்கம்பக்கத்துல இருக்கறவங்க வந்து நிக்கணும். அந்த அளவுக்குக் குடியிருக்கறவங்க மத்தியில சுமுகமான உறவு இருக்கணும். அது இருந்தாலே பல மோசமான சம்பவங்களைத் தடுக்க முடியும்" என்கிறார் ராஜ்குமார்.

ஆனால், "செக்யூரிட்டி போடுவதால் மட்டும் எல்லாப் பிரச்னையும் தீர்ந்துவிடாது" என்கிறார் பெசன்ட் நகர் அபார்ட்மெண்டில் குடியிருக்கும் ராமசேஷன்.



• வெங்கட்

"இப்போ பில்டர்ஸ் வீடு கட்டறப்போ தொலைநோக்குப் பார்வையோட கட்டறதில்ல. ஏனோதானோன்னு கட்டிடறாங்க. உதாரணமா இந்த ஃப்ளாட்டை நான் வாங்கினப்போ வாசல்லயும், பின்புறமும் ரெண்டு மரக்கதவு மட்டும்தான் இருந்துச்சு. ஆறு மாசத்துக்கு முன்னால நாங்க திருச்சி போயிருந்தப்போ, பின்பக்க கதவை ரொம்ப ஈஸியா உடைச்சு,

நகை, பணத்தைக் கொள்ளையடிச்சுட்டாங்க. அதனால நானே செலவு பண்ணி ரெண்டு க்ரில் கதவுகளை ரெண்டு பக்கமும் போட்டிருக்கோம். ஃப்ளாட் ப்ரொமோட்டர்ஸ் இந்த விஷயத்துல இன்னும் கொஞ்சம் சிரத்தை எடுத்தா ரொம்ப நல்லது" என்கிறார் ராமசேஷன்.

**ச**ரி, ஃப்ளாட் ப்ராமோட்டர்ஸ் என்ன சொல்கின்றனர்?

"பாதுகாப்புக்கென தற்போது ஆடியோ, வீடியோ என்று இருவித டெக்னிக்குகள் உள்ளன. ஆடியோ என்பது வீட்டுக்காரர் மற்றும் வாட்ச்மேனுக்காக இண்டர்காம் வசதியை ஏற்படுத்தித் தருவது. இதை நாங்களே செய்து தருகிறோம். நம் வீட்டுக்கு வந்திருப்பவர் பற்றிய விவரங்களை இண்டர்காம் வழியாக வாட்ச்மேன் நமக்குத் தெரிவிக்க, அதன்பிறகு அவரை வீட்டுக்குள் அனுமதிக்க இது மிகவும் பயனுள்ளதாக இருக்கும். அதேபோல நம் வீட்டில் ஏதேனும் ஆபத்து இருந்தால் இண்டர்காம் மூலம் செக்யூரிட்டிக்குத் தெரிவிக்க முடியும். வீடியோ என்பது செக்யூரிட்டி ரூமில் ஒரு எலக்ட்ரானிக் சென்ஸார் மெஷின் வைக்கப்பட்டிருக்கும். நம் வீட்டுக்கு வர விரும்புபவர்களை நம் வீட்டில் இருக்கும் மானிட்டரில் பார்த்துக் கொள்ள முடியும்." என்கிறார் பிரபல ஃப்ளாட் ப்ரொமோட்டர்களுள் ஒருவரான 'கே.ஜி.எஸ்.' வெங்கட்.

**அ**பார்ட்மெண்ட் ஒன்றில் பணியாற்றும் வாட்ச்மேன் கன்னியப்பன், "இருட்டு, கொள்ளை ஏதும் நடக்காம இருக்கணும்னா அதுக்கு வாட்ச்மேன் செய்ய வேண்டியது ரெண்டுங்க. ஒண்ணு, ஒரே இடத்துல சேரைப் போட்டு உட்கார்ந்துக்காம, சுத்திச் சுத்தி வரணும். ரெண்டாவது, சந்தேகம்னு வந்துச்சுன்னா எந்த டிரஸ்ல, எந்த வண்டில யார் வந்தாலும் தயக்கமில்லாம விசாரிச்சுடணும். இல்லன்னா டேஞ்சர்தான்" என்றார்.

அடுக்குமாடி பாதுகாப்பு குறித்து காவல்துறையின் பதில் என்ன?

"நம்மகிட்ட எவ்ளோ நகை இருக்கு, இன்னிக்கு நம்ம வீட்ல யார் இருக்காங்க, யார் வெளியூர் போறாங்க என்பது மாதிரியான விஷயங்களைப் பொது இடங்கள்ல பேசாம இருந்தாலே பாதி பிரச்னை தீர்ந்துடும். அடுத்து செக்யூரிட்டி. கட்டடத்துக்காக நியமிச்சிருக்குற செக்யூரிட்டி கார்டை காவல்துறைகிட்ட அறிமுகம் செய்துவைக்க வேண்டும். பல திருட்டுகளுக்கு செக்யூரிட்டியே உடந்தையா இருந்திருக்காங்க. இப்போ ஜன்னல் கம்பிகள் எல்லாமே ஸ்க்ரு டைப்பாகத்தான் வைக்கறாங்க. இது அதிக பாதுகாப்பு இல்லாதது. அதனால, ஜன்னல் மற்றும் கதவுகளை சுவருக்குள்ளேயே புதைந்திருப்பது போல அமைக்கறது பாதுகாப்பானது" என்றார் பெயர் சொல்ல விரும்பாத வடசென்னை காவல்துறை அதிகாரி ஒருவர்.

- கலை

படங்கள் : ஸ்ரீஹரி






# பொசைடன்
## TITANIC-2

**'பொ**சைடன்' என்பது கடல் கடவுளின் பெயர். இங்கே அது கப்பல்.

பெரிய அளவில் கப்பலில் புத்தாண்டுக் கொண்டாட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அதேசமயம் கப்பலை நோக்கி வரும் ஒரு பேரலை அதைப் புரட்டிப் போடுகிறது. "அமைதியாக இங்கேயே இருங்கள். சீக்கிரத்திலேயே உதவி வரும்" என்று கேப்டன் மிஞ்சியவர்களைப் பார்த்துக் கூற, அதை ஏற்காமல் கிளம்புகிறார்கள் ஏழு பேர். புரட்டிப் போடப்பட்ட கப்பலின் பல இடிபாடுகள், கசியும் மின்சாரக் கம்பிகள், அவ்வப்போது பொங்கி மூழ்கடிக்கும் நீர் என்று பல இடைஞ்சல்களைக் கடந்து தப்புகிறார்கள் (கேப்டனின் பேச்சைக் கேட்டவர்கள் சீக்கிரமே ஜலசமாதி அடைகிறார்கள்).

தப்பிக்கும் முயற்சியில் இவர்கள் சந்திக்க வேண்டிய சாகசங்கள் அற்புதமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. ஆனால் சம்பந்தப்பட்ட எழுவரின் பின்னணி மற்றும் மனித உணர்வுகளை படத் தொடக்கத்தில் அழுத்தமாகக் காட்டியிருந்தால், அது ஒரு தனிப் பரிமாணத்தைக் கொடுத்திருக்கும். இயக்குநர் அதில் தவறிவிட்டார்.

கப்பலின் பிரம்மாண்டத்தை வெளிப்படுத்தும் முதல் ஷாட்டிலேயே ஒளிப்பதிவுக் கோணங்கள் மனதைக் கவர்கின்றன. மிகக் குறுகிய குளிர்சாதனக் குழாய்க்கான பாதை வழியாக மேலேற முயற்சிக்கும்போதும் அதில் சிக்கல்கள் ஏற்படும் காட்சியிலும்கூட ஒளிப்பதிவாளர் ஜான் சீல் வியக்க வைக்கிறார். படம் பார்த்தவர்கள் கொஞ்ச காலத்துக்காவது கப்பல் பயணத்தைத் தள்ளிப் போட்டால் வியப்பில்லை.

இருபது வருடங்களுக்கு முன்பு, கணினி சாகசங்கள் அவ்வளவாக இல்லாத காலத்திலேயே வெளிவந்த ஜீன் ஹாக்மென் நடித்த 'பொசைடன் அட்வென்ச்சர்' மற்றும் 'டைட்டானிக்' இந்த இரண்டு படங்களை ஒப்பிடாமல் இருந்தால் இந்தப் படத்தை நிறையவே ரசிக்க முடியும் (இந்தப் படத்தை டைட்டானிக்-2 என்று விளம்பரப்படுத்தியுள்ளார்கள். ரொம்ப தைரியம்தான்).

- **ஜி.எஸ்.எஸ்.**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.